பேராசிரியர்

திருமணம் செல்வக் கேசவராய முதலியார்

பயன்படுத்திய இந்நூல்

அவர்கள்தம் பேரன் திருவாளர்

தி நம்பிராசன் அவர்களால்

மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

அன்பளிப்பாக

வழங்கப்பெற்றது.

உ
கணபதி துணை

சிதம்பரம் பச்சகந்தையர்மடம்
ஸ்ரீ சென்னமல்லையர் அருளிச்செய்த

# சிவசிவ வெண்பா,

திருவாவடுதுறை
ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த
சோமேசர்

# முதுமொழி வெண்பா

சிதம்பரம் ஈசானியமடம்
ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த

# ஸ்ரீகேசர் முதுநெறிவெண்பா.

[மேற்படி நூல்கள் ஒவ்வொன்றிலும் வரும்
திருக்குறள் அதிகார அட்டவணையுடன்]

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1920

விலை அணு 8

# முகவுரை



சிதம்பரம் பச்சைகந்தையர் மடத்து வீரசைவராகிய ஸ்ரீ சென்ன மல்லையர் அருளிச்செய்த சிவசிவவெண்பா, திருவாவடுதுறை ஸ்ரீ சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த சோமேசர் முதுமொழி வெண்பா இவ்விருநூல்களும் திருக்குறளின் வழிநூல்களாக, ஒவ்வொரு நூலும் திருக்குறளின் அதிகார வரிசையில் ஒவ்வொரு அதிகாரத்துக்கும் இரண்டிரண்டு செய்யுள் விகிதமாகச் செய்யப்பட்ட இருநூற்றறுபத்தாறு நேரிசை வெண்பாக்களால் இயற்றப்பட்டுள்ளது. அதிகாரத்திற் கிரண்டாக அமைக்கப்பட்டிருக்கும் செய்யுட்க ளிரண்டிலும், ஒன்று 'சிவசிவா' என்ற முன்னிலையையும், ஒன்று 'சோமேசா' என்ற முன்னிலையையும் உடையன. அவ்விரண்டின் ஈற்றடிகளும் அவ்வவ் வதிகாரத்திலுள்ள இரண்டு குறள் வெண்பாக்களாகவே அமைந்துள்ளன. "வழிநூல் செய்வோர் முன்னோர் நூற் கருத்துக்களைப் பெரும்பாலுந் தழுவிச் செய்வதோடு, அவர்களுடைய செய்யுட்களையும் தங்கள் செய்யுட்களினிடையே பொதிந்து சொல்லுதல் தகுதியாம்" என்ற முறைப்படியே, இதன் செய்யுட்களில் குறள் வெண்பாக்களை ஈற்றடிகளாக அமைக்கப்பெற்றிருக்கின்றன.

இவை இங்ஙனம் அமைந்து அரிய பல நீதிகளையும் உதாரணமான பல நீதிக் கதைகளையும், குறளின் அதிகார வரம்புகளையும், அதன் செய்யுட்களையும் உடையதாயிருத்தலினாலே, இவற்றைப் வாசித்தலால் திருக்குறள் முழுவ

தையும் வாசித்ததுபோ லாவதோடு, திருக்குறளில் இரு நூற்றறுபத்தாறு செய்யுட்களும் மனப்பாடமாம். அநேக நீதிக் கதைகளையும் உணரலாகும்; தெய்வ சிந்தனையும் உண்டாகும்; அன்றியும், நற்பயன்களையும் அடையலாம். "சுருங்கச சொல்லல் விளங்கவைத்தல்" என்ற முறைப்படி, கடல்போன்ற திருக்குறட் கருத்துக்களை யெல்லாம் சுருக்கி அடக்கி அநேகம் உதாரணக் கதைகளையுஞ் செறித்துப பல அரிய விஷயங்களை விளங்க அமைததிருக்கும் இந் நூல்கள், உலகில் நாற்பொருட் பயனகளையும் அடைய விரும்பும் தமிழறிஞர்க்கு உயிரினுஞ் சிறந்த நூல்களா மென்பது எல்லோரும் ஒப்பமுடிந்த விஷயம்.

முருகேசர் முதுநெறி வெண்பா என்னும் இவ்வரிய நூல் முருகக்கடவுளை முன்னிலைப்படுத்தி அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பானூலாகிய திருக்குறளின் முழுக் கருத்துக்களையுந் தழுவி, முதிய சன் மார்க்கங்களை யுடையதாக, தெய்வ ஸ்தோத்திரமும் விரவி வரச் சிதம்பரம ஈசானியமடம் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமி களால் செய்யப்பட்ட சிறந்த வோர் நீதிநூலாகும். இது, குறளில் உள்ள நூற்றுமுப்பத்துமூன்று அதிகாரங்களில் கிரமப்படியே ஒவ்வொரு அதிகாரத்துக்கும் ஒவ்வொரு நேரிசை வெண்பாவாக அமைக்கப்பெற்ற நூற்றுமுப்பத்து மூன்று செய்யுட்களையுடையது. ஒவ்வொரு வெண்பாவின் ஈற்றடியிரண்டும் குறளின் ஒவ்வொரு அதிகாரத்திலுமுள்ள பத்துக்குறள் வெண்பாக்களில் ஒன்றாகவே அமைக்கப்பட் டுள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் திருக்குறளின் ஒவ் வொரு அதிகாரத்தின் நீதியும், அதற்குதாரணமான பண் டைய சரித்திரங்களும், முருகக்கடவுளின் திருநாம உச்ச ரிப்பும் அடங்கியிருக்கின்றன.

# முகவுரை

இஃதிங்ஙனம் முருகேசர் முன்னிலையும், பழைய நீதிகளும் பொருந்திய வெண்பாக்களால் அமைக்கப்பெற்றிருக்கும் காரணத்தைக் கொண்டே, இதற்கு 'முருகேசர் முதுநெறி வெண்பா' என்னும் பெயர் ஏற்பட்டது. இது திருக்குறளுக்குவழி நூலாய், "முன்னோர்மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்ற முறைப்படி, அதன் செய்யுட்களையே ஈற்றடிகளாகப் பெற்ற வெண்பாக்களால் அமைந்திருத்தலான் இதனைத் திருக்குறட் சாரமென்றே சொல்லலாம். திருக்குறளில் ஆயிரத்து முந்நூற்று முப்பது செய்யுள்களில் அடங்கியிருக்கும் நீதிகள் முழுவதும் இதன் நூற்று நாப்பத்துமூன்று செய்யுட்களில் அடங்கி யிருப்பதால், இதனை வாசிப்போர்க்குத் திருக்குறள் முழுவதையும் வாசிப்பதனால் எவ்வளவு ஞான முண்டாகுமோ அவ்வளவு ஞான முண்டாவதோடு, திருக்குறளதிகாரங்களில் ஒவ்வொரு பாடலும் பாடமாகிவிடும். இன்னும் பல நீதிக் கதைகளும் விளங்கும்; தெய்வசிந்தனையும் ஏற்படும். இத்தகைய அரும்பெரும் பயன்களையுடைய இந்நூல் தமிழ் மக்கட் கின்றியமையாத தென்பது எல்லோர்க்கும் தெள்ளிதின் விளங்கும்.

ஆகவே, இத்துணைச் சிறப்பு வாய்ந்த இந் நூல்களைத் தமிழ் நாட்டினர்க்குப் பயன்படுத்தக் கருதி வெளிப்படுத்தலாயிற்று. இவற்றை அபிமானிக்கும் கடமை தமிழுலகத்திற் குரியதாம்.

இங்ஙனம்

ஸ்ரீ வீ. ஆறுமுகன்.

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1 | 13 | அடக்கமுடைமை | மனமொழி மெய்கள் தீயவழியிலே செல்லாது அடக்குதலுடையனாதல் | 6 | 4 |
| 2 | 64 | அமைச்சு | அமைச்சனது நற்குண நற்செய்கைகள் | 23 | 14 |
| 3 | 75 | அரண் | நாட்டிற்கு உறுப்பாய் அடங்குவதாயினும் அந்நாட்டிற்கும் அரசனுக்கும் பகைவரால் தொலைவு வாராவண்ணம் சேமமாய் நின்று காக்கும் அரணினது தன்மை | 26 | 16 |
| 4 | 25 | அருளுடைமை | தொடர்பு பற்றாது இயல்பாக எல்லாவுயிர்களிடத்தும் செல்வதாகிய கருணையை உடையனாதல் | 10 | 6 |
| 5 | 115 | அலரறிவுறுத்தல் | பிறர் சொல்லுகின்ற அலரை அறிவித்தல் | 40 | 24 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6 | 127 | அவர்வயின்விதும்பல் | தலைமகனும் தலைமகளும் ஆசைமிகுதியால் ஒருவரையொருவர் காணுதற்கு விரைதல் | 44 | 27 |
| 7 | 37 | அவாவறுத்தல் | புலன்களின்மேற் பழைய பழக்கவசத்தாற் செல்லும் நினைவை இடைவிடாத மெய்ப்பொருள் உணர்வால் அறுத்தல் | 14 | 9 |
| 8 | 73 | அவையஞ்சாமை | சொல்லுதற்குரிய சபையை யறிந்து சொல்லுங்கால் அதற் கஞ்சாமை | 26 | 16 |
| 9 | 72 | அவையறிதல் | அரசனோடிருந்த சபை யியல்பை யறிதல் | 25 | 16 |
| 10 | 17 | அழுக்காறாமை | பிறரது செல்வமுதலியவற்றைக் கண்டு சகியாமை | 7 | 5 |
| 11 | 4 | அறன்வலியுறுத்தல் | எனைப்பொருளு மின்பமும்போலாது அறன் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் அளித்தலால் இது அவ்விரண்டினும் வலியுடைத்தென்பது கூறுதல் | 3 | 2 |
| 12 | 43 | அறிவுடைமை | கல்வி கேள்விகளினாலாகிய அறிவோடு உண்மை யறிவை உடையவனாதல் | 16 | 10 |
| 13 | 8 | அன்புடைமை | சம்பந்த முடையவரிடத்தே காதலை யுடையவனாதல் | 4 | 3 |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 14 | 62 | ஆள்வினையுடைமை | இடைவிடாத மெய்ம்முயற்சி உடையனாதல் | 22 | 14 |
| 15 | 86 | இகல் | இருவர்தம்முள்ளே போர்செய்து வலிமை தொலைதற்கு ஏதுவாகிய மாறுபாடு | 30 | 18 |
| 16 | 50 | இடனறிதல் | வெல்லுதற்கேற்ற நிலத்தை யறிதல் | 18 | 11 |
| 17 | 63 | இடுக்கணழியாமை | தொழிலிலே முயல்வோன் ஊழினாலாவது, பொருளின்மையாலாவது, மெய் வருத்தத்தாலாவது தனக்குத் துன்பம் வந்தவிடத்து அதற்கு மனங் கலங்காமை | 22 | 14 |
| 18 | 107 | இரவச்சம் | மானங் கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதல் | 37 | 23 |
| 19 | 106 | இரவு | மானங்கெடாத இரவு இரவாமையோடு ஒத்தலின் அவ்விரவின் சிறப்புக் கூறுதல் | 37 | 22 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 20 | 5 | இல்வாழ்க்கை | இல்லாளொடுகூடி வாழ்தலினது சிறப்பு | 3 | 2 |
| 21 | 39 | இறைமாட்சி | அரசனது நற்குண நற்செய்கைகள் | 14 | 9 |
| 22 | 10 | இனியவைகூறல் | மனத்தின்கணுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் இனிய சொற்களைச் சொல்லுதல் | 5 | 3 |
| 23 | 32 | இன்னாசெய்யாமை | தனக்கொரு பயனைக் குறித்தாவது, வைரம் பற்றியாவது, சோர்விலாவது ஒருயிர்க்குத் துன்பந் தருமவைகளைச் செய்யாமை | 12 | 8 |
| 24 | 23 | ஈகை | வறியராய் எற்றோர்க்கு இல்லையென்னாது கொடுத்தல் | 9 | 6 |
| 25 | 89 | உட்பகை | புறப்பகைக்கு இடமாக்கிக்கொடுத்து அது வெல்லுமளவும் உள்ளாய் நிற்கும் பகை | 31 | 19 |
| 26 | 104 | உழவு | சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாகிய உழுதற்றொழில | 36 | 22 |
| 27 | 124 | உறுப்புநலனழிதல் | தலைமகளது அவயவங்கள் தம் மழகு அழிதல | 43 | 26 |
| 28 | 60 | ஊக்கமுடைமை | மனம் மெலிதலின்றித் தொழில் செய்தலிலே எழுச்சியுடைத்தாதல் | 21 | 13 |

## சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா. பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 29 | 133 | ஊடலுவகை | ஊடலால் தமக்குக கூடலின்பஞ் சிறந்தவிடத்து அச் சிறப்பிற் கேதுவாகிய அவ்வூடலைத் தலைமகள் மகிழ்தலும் தலைமகன் மகிழ்தலுமாம | 46 | 28 |
| 30 | 38 | ஊழ் | இருவினைப் பயன்களும் செய்தவனையே சென்று அடைவதற் கேதுவாகிய நியதி | 14 | 9 |
| 31 | 22 | ஒப்புரவறிதல் | உலக நடையை அறிந்துசெய்தல் | 9 | 6 |
| 32 | 14 | ஒழுக்கமுடைமை | தத்தம் வருணத்திற்கும் ஆச்சிரமத்திற்கும் உரிய ஒழுகத்தினை உடையராதல் | 6 | 4 |
| 33 | 59 | ஒற்றாடல் | பகைவர் அயலோர் நட்பினர் என்னும் மூன்று திறத்தாரிடத்தும் நிகழ்ந்தவை யறிதற்கு ஒற்றரை ஆளுதல் | 21 | 13 |
| 34 | 1 | கடவுள் வாழ்த்து | கவி, தான் வழிபடு கடவுளை யாவது, எடுத்துக்கொண்ட பொ | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | ருட்கு எற்புடைக் கடவுளையாவது வாழ்த்துதல் | 2 | 1 |
| 35 | 58 | கண்ணோட்டம் | நன்றொடு பழகினவரைக் கண்டால் அவர் சொல்லப்பட்டனவற்றை மறக்கமாட்டாமை | 21 | 13 |
| 36 | 118 | கண்விதுப்பழிதல் | கண்கள் தலைமகனைக் காணுதற்கு விரைதலாலே வருந்துதல் | 41 | 25 |
| 37 | 108 | கயமை | பொருட்பாலிற் கூறிய நற்குணங்கள் யாவும் இலராகிய கீழோரது தன்மை | 37 | 23 |
| 38 | 41 | கல்லாமை | கல்லாமையின் இழிவு | 15 | 9 |
| 39 | 40 | கல்வி | அறநூல் முதலியவற்றைக் கற்றலின் சிறப்பு | 15 | 9 |
| 40 | 29 | கள்ளாமை | பிறருடைமையா யிருக்கும் யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ள நினையாமை | 11 | 7 |
| 41 | 93 | கள்ளுண்ணாமை | ஒழுக்கமும் உயர்வு மழிப்பதாகிய கள்ளினை உண்ணாமையினது சிறப்பு | 32 | 20 |
| 42 | 122 | கனவுநிலையுரைத்தல் | தலைமகன் கண்ட கனவினது நிலைமையைச் சொல்லுதல் | 42 | 26 |
| 43 | 113 | காதற்சிறப்புரைத்தல் | தலைமகன், தலைமகள் ஆசை மிகுதியைக் கூறல் | 39 | 24 |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 44 | 49 | காலமறிதல் | வலிமையினாலே மிகுதி யுடையனாய்ப் பகைவன்மேற் போர்க்குச் செல்லும் அரசன் வெல்லுதற் கேற்ற காலத்தினை யறிதல் | 18 | 11 |
| 45 | 103 | குடிசெயல்வகை | தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் விதம் | 36 | 22 |
| 46 | 96 | குடிமை | உயர்ந்த குடியிற் பிறந்தாரது தன்மை | 33 | 20 |
| 47 | 71 | குறிப்பறிதல் | பிறர் நினைத்ததை அவர் சொல்லாமல் அறிதல் | 25 | 15 |
| 48 | 110 | குறிப்பறிதல் | தலைமகன், தலைமகள் குறிப்பை யறிதல் | 38 | 23 |
| 49 | 128 | குறிப்பறிவுறுத்தல் | ஒருவர் குறிப்பை ஒருவர்க்கு அறிவுறுத்தல் | 44 | 27 |
| 50 | 44 | குற்றங் கடிதல் | காமம், குரோதம், உலோபம், மானம், உவகை, மதம் என்னும் குற்றங்களை அகற்றுதல். | 16 | 10 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 51 | 83 | கூடாநட்பு | பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமயம் இடைக்குமளவும் புறத்திலேகூடி நடப்பவர் நட்பு | 29 | 18 |
| 52 | 28 | கூடாவொழுக்கம் | தவவேட முடையாராய் நின்று அத் தவத்தோடு பொருந்தாததாகிய தீய வொழுக்கத்தினை உடையாராதல் | 11 | 7 |
| 53 | 42 | கேள்வி | கேட்கத்தகுமநூலின் பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல் | 15 | 10 |
| 54 | 56 | கொடுங்கோன்மை | செங்கோலினது கோணுதற்றன்மை | 20 | 12 |
| 55 | 33 | கொல்லாமை | ஐயறிவுடையவை முதல் ஓரறிவுடையவைகள் ஈறாகிய உயிர்களைச் சோர்வினாலும் கொல்லுதலைச் செய்யாமை | 12 | 8 |
| 56 | 99 | சான்றாண்மை | பல குணங்களாலும் நிறைந்து, அவைகளை ஆளுதற்றன்மை | 34 | 21 |
| 57 | 46 | சிற்றினஞ் சோராமை | அறிவை வேறுபடுத்தி இருமையுங்கெடுக்கும் இயல்புடைய சிறிய இனத்தைப் பொருந்தாமை | 17 | 10 |
| 58 | 53 | சுற்றந்தழால் | தன்னது சுற்றத்தாரைத் தன்னைவிட்டு நீங்காவண்ணம் தழுவுதல் | 19 | 12 |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர்-முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 59 | 94 | சூது | சூதாடுதலின் இயல்பு | 33 | 20 |
| 60 | 55 | செங்கோன்மை | ஒரு பக்கத்திலே கோடாமற் செவ்விய கோல்போல அரசனுற் செய்யப்படும் முறையினது தன்மை | 20 | 12 |
| 61 | 11 | செய்ந்நன்றியறிதல் | தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமை | 5 | 3 |
| 62 | 65 | சொல் வன்மை | தான் நினைத்த தொழில் முடியும் வழியால் வார்த்தைகளைச் சொல்ல வல்லவளுதல் | 23 | 14 |
| 63 | 109 | தகையணங்குறுத்தல் | தலைமகன்பொழிற்கண்ணே தனித்து நின்றவளது அழகு தனக்கு வருத்த முண்டாக்குதலைச் சொல்லுதல் | 38 | 23 |
| 64 | 27 | தவம் | மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலியன | 10 | 7 |
| 65 | 120 | தனிப்படர்மிகுதி | தனியாகிய துன்ப மிகுதி | 41 | 25 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 66 | 82 | தீநட்பு | தீக் குணத்தாரோடு உளதாகிய நட்பு | 29 | 18 |
| 67 | 21 | தீவினையச்சம் | பாவங்களா யுள்ளவற்றை செய்தற்கு அஞ்சுதல் | 8 | 5 |
| 68 | 35 | துறவு | புறமாகிய செல்வத்திலும் அகமாகிய உடம்பிலும் உண்டாகிய பற்றை அவைகளின் நிலையாமை நோக்கி விடுதல் | 13 | 8 |
| 69 | 69 | தூது | பொருத்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசரிடத்தே செல்வாரது தன்மை | 24 | 15 |
| 70 | 47 | தெரிந்துசெயல்வகை | செய்வனவற்றை ஆராய்ந்து செய்தல் | 17 | 11 |
| 71 | 51 | தெரிந்துதெளிதல் | பிறப்பு குணம் அறிவு என்பவைகளையும் செய்கையையும் காட்சி முதலிய பிரமாணங்களால் ஆராய்ந்து தெளிதல் | 18 | 11 |
| 72 | 52 | தெரிந்து வினையாடல் | தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல தொழில்களை யறிந்து அவைகளிலே ஆளும் திறம் | 19 | 12 |
| 73 | 12 | நடுவுநிலைமை | பகைவர் அயலோர் நட்பினரென்றும் மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாது ஒப்பநிற்கும் நிலைமை | 5 | 4 |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-முமொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 74 | 80 | நட்பாராய்தல் | நட்பினரை ஆராய்ந்தறிந்தே இணைக்க வேண்டுதலால், அவரை ஆராயும் திறம் | 28 | 17 |
| 75 | 79 | நட்பு | புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தல் என்னும் மூன்றாலும் நிகழ்வதாகிய தொடர்பு | 28 | 17 |
| 76 | 112 | நலம்புனைந்துரைத்தல் | தலைவன் : தலைவி நலத்தைப் புனைந்து சொல்லியது | 39 | 24 |
| 77 | 105 | நல்குரவு | அனுபவிக்கப்படுவன யாவும் இல்லாமை | 36 | 22 |
| 78 | 101 | நன்றியில் செல்வம் | சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தின் சிறப்பு | 35 | 21 |
| 79 | 74 | நாடு | அரண்முதலிய அங்கங்களுக்கு அவசியம் வேண்டுவதாகிய நாடு | 26 | 16 |
| 80 | 102 | நாணுடைமை | முன் சொல்லப்பட்ட சால்பு பண்பு முதலிய குணங்களா லுயர்ந்தோர் தமக்குத் தகாத கருமங் | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | களில் நாணுதலுடையராந் தன்மை | | 35 | 22 |
| 81 | 114 | நாணுத்துறவுரைத்தல் | ஆற்ருளுகிய தலைமகன் தனது நாணமிழத்தலைச் சொல்லுதல் | 39 | 24 |
| 82 | 34 | நிலையாமை | தோற்ற முடையவை யெல்லாம் நிலைபெருத் தன்மை | 13 | 8 |
| 83 | 126 | நிறையழிதல் | தலைமகள் மனதிலே அடக்கப் படுமவைகளை ஆசை மிகுதியால் அடக்கமாட்டாமல் வெளிப்படுத்தல் | 43 | 26 |
| 84 | 121 | நினைந்தவர் புலம்பல் | தலைமகள் தலைமகனை நினைந்து வருந்துதல் | 42 | 25 |
| 85 | 3 | நீத்தார் பெருமை | முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல் | 2 | 2 |
| 86 | 125 | நெஞ்சொடுகிளத்தல் | பிரிவின் பொருமை மேற்படத் தனக்கு ஒரு பற்றுக்கோடு காணுத தலைமகள் தன் நெஞ்சொடு சொல்லுதல் | 43 | 26 |
| 87 | 130 | நெஞ்சொடு புலத்தல் | புணர்ச்சி விரும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தல் | 45 | 27 |
| 88 | 88 | பகைத்திறந் தெரிதல் | பகைத்திறங்களை ஆராய்ந்தறிதல் | 31 | 19 |
| 89 | 87 | பகைமாட்சி | அறிவில்லாமை முதலிய குறையுடைமையால் பகையை மாட்சிமைப்படுத்தல் | 30 | 19 |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 90 | 119 | பசப்புறுபருவரல் | பிரிவாற்றுமையால் வரும் நிற வேறுபாட்டால் உண்டாகிய வருத்தம் | 41 | 25 |
| 91 | 117 | படர்மெலிந் திரங்கல் | பிரிவாற்றுளாகிய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்போதும் நினைத்தலின் அந்நினைவால் மெலிந்திரங்கல் | 40 | 25 |
| 92 | 78 | படைச்செருக்கு | சேனையினது மறமிகுதி | 27 | 17 |
| 93 | 77 | படைமாட்சி | சேனையினது நன்மை | 27 | 17 |
| 94 | 100 | பண்புடைமை | பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து நடத்தல் | 35 | 21 |
| 95 | 20 | பயனிலசொலலாமை | தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பங்களுள் ஒன்றையும் தாராத சொற்களைச் சொல்லாமை | 8 | 5 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 96 | 81 | பழமை | நட்பினாது பழமையாந் தன்மையை நோக்கி அவர் செய்த பிழைகளைப் பொறுத்தல் | 28 | 17 |
| 97 | 116 | பிரிவாற்றமை | தலைமகன் தலைமகளைப் பிரிந்து செல்லு நாளில் அப் பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவளாந் தன்மை | 40 | 24 |
| 98 | 15 | பிறனில்விழையாமை | காம மயக்கத்தாற் பிறனுடைய மனையாளை விரும்பாமை | 6 | 4 |
| 99 | 24 | புகழ் | இல்லறத்தில் வழுவாதார்க்கு இம்மைப் பயனாகி இவ் வுலகத்தின்க ணிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி | 9 | 6 |
| 100 | 111 | புணர்ச்சிமகிழ்தல் | குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப் புணர்ச்சியை மகிழ்ந்து கூறல் | 38 | 23 |
| 101 | 129 | புணர்ச்சி விதும்பல் | தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல் | 44 | 27 |
| 102 | 7 | புதல்வரைப் பெறுதல் | தென்புலத்தார் கடன்செலுத்தற்குரிய நன்மக்களைப் பெறுதல் | 4 | 3 |
| 103 | 131 | புலவி | தலைமகனும் தலைமகளும் ஒருவரோ டொருவர் புலத்தல் | 45 | 27 |
| 104 | 132 | புலவி நுணுக்கம் | தலைமகனும் தலைமகளும் கூடியிருந்தவிடத்து, பிணங்குதற்குக் காரணம் இல்லாதிருக்க | | |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| | | | வும் நுட்பமாகிய ஒரு காரணமிருப்பதாக வுட்கொண்டு தலைமகள் பிணங்குதல் | 45 | 28 |
| 105 | 26 | புலான்மறுத்தல் | ஊனுண்டலை ஒழித்தல் | 10 | 6 |
| 106 | 85 | புல்லறிவாண்மை | சிற்றறிவினராயிருந்தே தன்னைப் பேரறிவினராக மதித்து, உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொல்லைக் கொள்ளாமை | 30 | 18 |
| 107 | 19 | புறங்கூறாமை | காணாதவிடத்துப் பிறரை இகழ்ந் துரையாமை | 8 | 5 |
| 108 | 91 | பெண்வழிச்சேறல் | தன்வழி நடத்தற்கு உரியவளாகிய மனைவி வழியே தான் நடத்தல் | 32 | 19 |
| 109 | 45 | பெரியாரைத் துணைக்கோடல் | தீநெறிவிலக்கி நன்னெறியிற் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல் | 16 | 10 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 110 | 90 | பெரியாரைப் பிழையாமை | பெரிய ராயினோரை அவமதித்து நடவாமை | 31 | 19 |
| 111 | 98 | பெருமை | செய்தற்கரிய செய்தல், செருக்கில்லாமை, பிறர் குற்றங் கூறாமை என்றிவைமுதலிய நற்குணங்களால் பெரிய ராயினோரது தன்மை | 34 | 21 |
| 112 | 84 | பேதைமை | கற்றிருந்தும் யாதொன்றும் அறியாமை | 29 | 18 |
| 113 | 54 | பொச்சாவாமை | அழகும் செல்வமும் ஆற்றலும் முதலானவைகளால் மகிழ்ந்து தன்னைக் காத்துக்கொள்ளுதல் முதலிய காரியங்களில் சோர்தலைச் செய்யாமை | 19 | 12 |
| 114 | 76 | பொருள் செயல்வகை | பொருளைச் சம்பாதித்தலின் விதம் | 27 | 16 |
| 115 | 123 | பொழுதுகண்டிரங்கல் | மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக்கண்டு தலைமகள் இரங்குதல் | 42 | 26 |
| 116 | 16 | பொறையுடைமை | காரணம் பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தமக்குத் தீங்கு செய்தவழித் தாமும் அதனை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலை யுடையராதல் | | |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| 117 | 61 | மடியின்மை | நினைக்கப்பட்டவைகளைச் செய்யும்போது சோர்தலில்லாமை | 22 | 13 |
| 118 | 95 | மருந்து | பழவினையாலும் காரணங்களாலும் மக்கட்கு வரும் பிணிகளைத் தீர்க்கும் மருந்தின் திறம் | 33 | 20 |
| 119 | 70 | மன்னரைச் சேர்ந்தொழுகல் | மந்திரி அரசரைப் பொருந்தி நடக்கும் விதம் | 25 | 15 |
| 120 | 97 | மானம் | எந்நாளும் தம்முடைய நிலையிலே தாழாமையும் ஊழால் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமாம் | 34 | 21 |
| 121 | 36 | மெய்யுணர்தல் | விபரீத சந்தேகங்களின்றி உண்மையறிதல் | 13 | 8 |
| 122 | 92 | வரைவின்மகளிர் | தமது இன்பத்தை விலை கொடுப்பவர் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவில்லாத மகளிரது இயல்பு | 32 | 20 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 123 | 48 | வலியறிதல் | பகைவரைத் தண்டஞ்செயக் குறித்தவன் இரு திறத்தினுமுள்ள வலிமைகளை அளந்தறிதல் | 17 | 11 |
| 124 | 30 | வாய்மை | மெய்யினது தன்மை | 11 | 7 |
| 125 | 6 | வாழ்க்கைத் துணை நலம் | இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மை | 3 | 2 |
| 126 | 2 | வான்சிறப்பு | -வுளது ஆணையால் உலகமும் அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல் | 2 | 2 |
| 127 | 9 | விருந்தோம்பல் | பழக்க முடையவராயும் அஃதிலராயும் வரும் விருதினரை உபசரித்தல் | 4 | 3 |
| 128 | 68 | வினைசெயல்வகை | மன வலிமையால் தொழிலைச் செய்யுந் திறம் | 24 | 15 |
| 129 | 67 | வினைத்திட்பம் | பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்கு வேண்டுவதாகிய மனவலிமை | 24 | 15 |
| 130 | 66 | வினைத்தூய்மை | செயப்படுந் தொழில்கள் பொருளேயன்றி அறமும் புகழும் தந்து நல்லனவாதல் | 23 | 14 |
| 131 | 31 | வெகுளாமை | கோபஞ் செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்தே | | |

சிவசிவவெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா ஆகிய இம்மூன்று நூல்களிலும் வரும் திருக்குறள் அதிகார அட்டவணை.

| தொடர் எண் | குறள் அதிகார எண் | குறள் அதிகாரம் | அதிகாரத்தின் பொருள் | சிவ-சோ-மு-மொழி வெண்பா பக்கம் | முருகேசர் முதுநெறி வெண்பா பக்கம் |
|---|---|---|---|---|---|
| | | | உண்டாகியவிடத்தும் கோபஞ் செய்யாமை | 12 | 7 |
| 132 | 18 | வெஃகாமை | பிறர்க்குரிய பொருளை அபகரிப்பதற்கு நினையாமை | 7 | 5 |
| 133 | 57 | வெருவந்தசெய்யாமை | குடிகள் அஞ்சுவதும், பகுதியஞ்சுவதும், தான் அஞ்சுவதுமாகிய தொழில்களைச் செய்யாமை | 20 | 13 |



உ

கணபதி துணை

# சிவசிவ வெண்பாவும்,

## சோமேசர்

# முதுமொழி வெண்பாவும்.



## காப்பு

தெள்ளுலக நீதி சிவசிவா வென்றுதிரு
வள்ளுவர் வெண்பாவால் வழுத்துறவெற்—குள்ளதுணை
கந்தனிலீ ராறுண கைமே வியகருணைத்
தந்திமுகன் செம்பதுமத் தாள்.

மதுவளரும் பூஞ்சடில மல்குசோ மேசர்
முதுமொழி வெண்பாவை மொழியப்—பொதுளு
மடம்பிடுங்கி யன்பர்க்கு வான்வீ டளிக்குங்
கடம்பொழி முக்கட் களிறு.

## அவையடக்கம்

சிவசிவா வெண்பாரிச் செய்யுட் டிறந்தேர்ந்
தெவர்களுமென் நஞ்சா திசைத்தேன்—கவிஞரியற்
பண்பா லுரைத்த பழமொழிமுன் னீதுமொரு
வெண்பாவா லாய்விளங்க வே.

## கடவுள் வாழ்த்து

விற்பிரம்பா லுற்றவடி மேவவுல கெங்குநிறை
சிற்பரனே தெய்வஞ் சிவசிவா—சொற்சிறந்த
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (௧)

சீர்கொணிறை யொன்றுண்டத் தெய்வமீ யென்றொப்பாத்
சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா—வோரில்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (௧)

## வான் சிறப்பு

பூமலர்கோ ணேரியற்கும் பூவையர்க்கும் பூமழைசெய்
தீமைநலங் கண்டோஞ் சிவசிவா—பூமுற்
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. (௧௫)

நேய புகழ்த்துணையார் நீராட்டுங் கைதளர்ந்தன்
றூயமுடி மேல்வீழ்ந்தார் சோமேசா—வாயுங்கால்
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். (௧௯)

## நீத்தார் பெருமை

நல்லசுக ருக்கன்றி நாணுவதென் வேதமுனி
செல்ல மடவார் சிவசிவா—சொல்லின்
உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. (௨௪)

அத்திரவாக் காற்புத்தன் சென்னியறத் தார்சண்பைச்
சுத்தனார் தம்மன்பர் சோமேசா—நித்த
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (௨௮)

## அறன்வலியுறுத்தல்

எப்தருமம் பாலுயிர்கீத் தெய்துபொழு தூங்கன்னன்
செய்தரும மீந்தான் சிவசிவா—வுய்யுநெறி
அன்றறிவா மென்னு தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. (௪)

தக்கனார் வேள்வித் தவத்தைமேற் கொண்டிருந்துந்
தொக்கவற மாயிற்றோ சோமேசா—மிக்க
அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம். (௫)

## இல்வாழ்க்கை

எய்து சவுபரிக்கன் றீன்றமக ளாரைமணஞ்
செய்யீவர சீந்தான் சிவசிவா—தூய்யதவத்
தாற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. (௬)

இல்வாழ் தரும னியற்சந் திரசேனன்
றொல்வார்த்தை கீழ்ப்படுத்தான் சோமேசா—நல்ல
இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. (௭)

## வாழ்க்கைத்துணைநலம்

சத்தியீந்தப் பாமலரிச் சந்திரற்குச் சந்த்ரமதி
சித்த மொருமித்தாள் சிவசிவா—புத்தியுடன்
தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (௮)

மூவர் தடுப்பவுங் கொண்மூவைப் பணிகொண்டா
யே வனசூயை சோமேசா—மேவுபிற
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (௯)

## புதல்வரைப் பெறுதல்

மறலி செயன்மாற்றி வயதா ஞற்பெற்ற
திறன்மகப் பேருஞ் சிவசிவா—பெறுபே
றெழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (௭)

பாடினர்மூ வாண்டினிற்சம் பந்தரென யாவோருங்
கூடிமகிழ்ச்சி மெய்யே சோமேசா—நாடியிடில்
தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. (௮)

## அன்புடைமை

வேந்துரையாற் பூசைபுரி வேடன்மனை வெந்துமுன்போந்
சேர்ந்து பணிசெய்தாள் சிவசிவா—வோர்ந்தவிடத்து
அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. (௯)

தோன்று வகைகாந்துந் தோன்றலைக்கண் டுண்ணெகிழ்ந்து
தோன்றநின்றாள் முன்புநளன் சோமேசா—தோன்றுகின்ற
அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும். (௰)

## விருந்தோம்பல்

அன்னமிடான் பொன்னு டைந்துந் தனதுடலைத்
தின்னென வேதின்றான் சிவசிவா—மன்னியயற்
செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு. (௧௧)

பொன்னனையா ளன்பருக்கே போனகமீந் துள்ளருளாற்
சொன்னமிகப் பெற்றாளே சோமேசா—பன்னில்
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. (௧௨)

### இனியவை கூறல்

நன்றெடுத்தா னின்சொற் கொடுகருணை வாரிதியைச்
சென்றெடுத் தின்புற்றான் சிவசிவா—நன்றெடுத்த
இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. (கூ)

நின்சொ லிராம னியம்பவி ரேணுகைசேய்
தன்பமொழி யேபுகன்றான் சோமேசா—வன்புடைய
இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. (௧0)

### செய்ந்நன்றியறிதல்

பூடணம்போல் வீடணன்மேற் போனதே லேற்றநன்றி
தேட முடியாதே சிவசிவா—நாடியெதிர்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. (௧௧)

பன்னு மசதிநன்றி பாராட்டிக் கோவைநூல்
சொன்னானே யளவைமுன்பு சோமேசா—மன்னுந்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். (௧௧)

### நடுவுநிலைமை

நயகைமை சொல்லா னடுவிகந்த மால்வெருவு
செகக னரவானான் சிவசிவா—வெங்குஞ்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. (௧௨)

வேகியனு னாமோவென் றெள்ளாது வெண்ணெய்நல்லூர்ச்
சோதிவழக் கேபுகழ்ந்தார் சோமேசா—வோதிற்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. (௧௨)

## அடக்கமுடைமை

இறைமுருகன் முன்னின் றிசைத்தமொழி தேரான்
சிறையிருந் தான்முன் சிவசிவா—புறவுறுப்பின்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (கஉ)

எல்லா முணர்ந்தும் வியாத னியம்பியவச்
சொல்லாலே நாவயர்ந்தான் சோமேசா—வல்லமையால்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (கங)

## ஒழுக்கமுடைமை

தன்மதுரை சொன்ன பழிக்கஞ்சித் தகவுரைத்தான்
றென்மதுரை நாதன் சிவசிவா—வென்னின்
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். (கச)

தீபனவே சொல்லுஞ் சிசுபாலன் முன்புகண்ணன்
றூயதலாச் சொல்லுரையான் சோமேசா—வாயின்
ஒழுக்க முடைபவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். (கரு)

## பிறனில்விழையாமை

வாளிழந்தான் சீதையினால் வாழ்விழந்தான் பத்துச்
சிரமு மிழந்தான் சிவசிவா—வுரமாம்
எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். (கசு)

ஆன்றவெழிற் சீதையைவேட் டைந்நான்கு திண்கரத்தான்
றேன்றபழி மாறிலனே சோமேசா—வேன்ற
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். (க௭)

## பொறையுடைமை

ஐவரினு முன்னோ னரசவையி லேபொறுத்த
செய்கை பெரிதன்றோ சிவசிவா—வையத்து
ளொறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. (கரு)

ஒட்டலன்செய் தீமைக்கொ ருதூத ரென்றுரைத்தார்
சுட்டியசீர் மெய்ப்பொருளார் சோமேசா—மூட்ட
ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். (கசு)

## அழுக்காறாமை

மேருவுட னிகலி விந்தமலை வீறழிந்து
சேருநிலை னூடே சிவசிவா—வோரின்
அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். (கஎ)

அன்பரைக்கண் டழுக்காறுஞ் சமணர்தம் வாயாற்
றுன்பமுற்றார் வெங்கழுவிற் சோமேசா—வன்பாம்
அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. (கஎ)

## வெஃகாமை

வாசவ னோராசை கொளவந்த பலனையிந்தத்
தேச மறியாதோ சிவசிவா—பேசுங்காற்
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். (கஅ)

நின்னபிடே கப்பழத்தை நீண்மறையோர்க் கீந்தவிறை
தான்னு தடி யோடழிந்தான் சோமேசா—பன்னில்
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். (கஅ)

## புறங்கூறாமை

குந்திமகார் பேறுரைத்த கொற்றவனார் தன்வரவுஞ்
சிந்தை செயலுற்றான் சிவசிவா—நிந்தை
பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும். (கசு)

கூனியிரா மன்பிரிந்து போமாறே கூறினளே
தூநறும்பூங் கொன்றையணி சோமேசா—தானே
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட னேற்றா தவர். (கஎ)

## பயனில சொல்லாமை

மன்னவையிற் சொன்ன வசையாற் சிசுபாலன்
சின்னமுற்றா னன்றே சிவசிவா—வென்னிற்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். (உ0)

சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதெனவே
தூக்கியுப தேசித்தார் சோமேசா—நோக்கிற்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். (உ0)

## தீவினையச்சம்

பார முடிபத்தும் பறித்தபழி சேதுவினாற்
றீருதலி னாலே சிவசிவா—சாருமிகற்
றீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். (உ௩)

தற்றொருவர்க் கூறைகொண்டு கொன்றதிம்மை யேகூடச்
சொற்றதனைக் கண்டோமே சோமேசா—வற்றான்
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. (உக)

## ஒப்புரவறிதல்

தாயைத் தடிகவென்ற தந்தைமொழி தவறாச்
சேயைப்போ லுண்டோ சிவசிவா—வாயுமிடத்து
ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (௨௨)

பண்டைவினை வெண்ணிநொந்தார் பாகஞ்செய் மாறனாந்
தொண்டர் மனைவியார் சோமேசா—கண்டோ
நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை
செய்யா தமைகலா வாறு. (௨௩)

## ஈகை

தந்தைக் கிளமைதரும் பூருவை நிகர்வார்
சிந்திக்கி னெக்கே சிவசிவா—சிந்தித்
திலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. (௨௫)

மீனன் றுரைப்பளவு மிக்குவகை பெற்றிலர்வன்
றோள ரியற்பகையார் சோமேசா—நீளுலகில்
இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. (௨௬)

## புகழ்

ஓடிவரு புடகன் றடலையரிந் தீந்தபுகழ்
மீதட வரிதே சிவசிவா—நாடிவரின்
ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. (௨௭)

போசன் கவிஞருக்கே போதப் பரிந்தளித்துத்
தூசிலாக் கீர்த்திகொண்டான் சோமேசா—வாசையுடன்
ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. (௨௭)

### அருளுடைமை

அன்றுமகப் பெறுவாட் கன்னைவடி வாகியரன்
சென்றுதவினை செய்தான் சிவசிவா—என்றும்
அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள. (உ௪)

மூர்த்தியால் வன்கண்மை மூண்ட வடுகாசன்
சூர்த்திறந்தா னுய்ந்தானே சோமேசா—கூர்த்த
பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது. (உ௫)

### புலான்மறுத்தல்

புன்புலா லுண்ணாது புள்ளடைந்த கன்கறிவார்
தின்பரோ தின்னார் சிவசிவா—துன்புறாஉந்
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள். (உ௬)

மச்சஞ் சமந்துய்ப்ப வானோர்ப் பணிகொண்டான்
நச்சனுஞ் சூரபன்மன் சோமேசா—நிச்சயமே
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள். (உ௬)

### தவம்

ஆடும் பரிசேவ லானா னடற்சூரன்
தேடுந் தவத்தாற் சிவசிவா—நாடுங்கால்
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். (உ௭)

ஊர்மணநல் லூர்ச்சடருள் யாருமணு கச்சிலர்தாந்
தூரநெறி நின்றயர்ந்தார் சோமேசா—வோரில்
தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது. (உ௮)

## கூடாவொழுக்கம்

அட்டோர னானிட் டரக்கன் பழிக்கரசைத்
தெட்டிவழி கொண்டான் சிவசிவா—சிட்டினர்க்குப்
பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும். (உஅ)

மாயனவ்வே டங்கொண்டே வன்சலந் தான்கிழத்தி
தூயநலங் கவர்ந்தான் சோமேசா—வாயின்
வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. (உஅ)

## கள்ளாமை

இல்வலன் வாதாவி கபடோதா யதுமலயச்
செல்வ முனிநோக்காற் சிவசிவா—சொல்லிற்
களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். (உக)

நாய்வாற் களவினன் ஞாலமிக ழப்பட்டான்
தூயனுங் காதிமகன் சோமேசா—வாயதனால்
எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. (உக)

## வாய்மை

பொங்குபுகழ் வாய்மைப் புனிதவதி யார்க்கரனூர்
செங்கனியை யீந்தார் சிவசிவா—துங்க
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. (௩0)

பிள்ளையுட னுண்ணப் பேசியமைத் தாரன்பு
தன்னுநிறத் தொண்டர் சோமேசா—வுன்னுங்காற்
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். (௩0)

## வெகுளாமை

தாவு சினத்தாற் றலையிழந்தான் றக்கனுமா
தேவி மகளாயுஞ் சிவசிவா—வாவன்மிகுந்
தன்னைத்தான காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். (௩௧)

பல்லவர்கோன் வந்து பணியக் கருணைசெய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா—கொல்ல
இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (௩௧)

## இன்னா செய்யாமை

புறம்பியத்து மின்னையுயிர் போக்கவந் தான்பட்ட
திறந்தெரி யாதோ சிவசிவா—பிறழ்ந்து
பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். (௩௨)

பிள்ளையார் கைப்பினிற்றீப் பெய்வித்த மீனவன்றீத்
துன்னுவெப்பு நோயுழந்தான் சோமேசா—வெள்ளிப்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும. (௩௨)

## கொல்லாமை

மேவும் கணசரனேர் வேதியனைக் காத்தநலந்
தேவ னறிவானே சிவசிவா—பூவுலகில்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (௩௩)

வேந்துமகற் றேர்க்கால் விடலஞ்சி மந்திரிதான்
சோர்ந்ததனை சாவிலிட்டான் சோமேசா—வாய்த்துணர்ந்தோர்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (௩௩)

### நிலையாமை

எங்கு மிறவா னிறந்ததொரு தூணின்ற
சிங்கத்தா லன்றோ சிவசிவா—தங்கிநிலை
நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (௧௪)

ஆக்கையு மாயிரத்தெட் டண்டங் களுநிலையாத்
தூக்கியழிந் தான்சூரன் சோமேசா—நோக்கியிடில்
நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (௧௪)

### துறவு

பத்ரகிரி மாதர்வசப் பட்டமன மீட்டதொரு
சித்ரகதை யன்றோ சிவசிவா—வொத்துத்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். (௧௫)

கோவணமொன் றிச்சிப்பக் கூடினவே பந்தமெல்லாந்
தூவணஞ்சேர் மேனியாய் சோமேசா—மேவில்
இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து. (௧௫)

### மெய்யுணர்தல்

சொற்சுவைசேர் வாசகத்திற் சொன்னபொரு ளீதென்றே
சிற்சபையே போனார் சிவசிவா—நற்கலைநூற்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. (௧௬)

காரிகையா ரைப்பொன்னைக் காட்டவுங்கா மாதிமும்மைச்
சோர்விழந்துய்ந் தாராசீர் சோமேசா—வோருங்காற்
காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய். (௧௬)

## அவாவறுத்தல்

சாரங்க மீது சடபரதன் சிந்தைவைத்துச்
சாரங்கம் பெற்றான் சிவசிவா—நேரும்
அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. (௧எ)

தாய்கருவில் வாழ்குழவி தாமெல்லாம் வேண்வேது
தூயபிற வாமையொன்றே சோமேசா—ஆயதனால்
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். (௧எ)

## ஊழ்

உற்றாளைப் பெட்டகத்திட் டோட்டுமிலங் கேசனைப்பின்
செற்றான்வந் தென்பார் சிவசிவா—வுற்றோரின்
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். (௧அ)

முன்ன ரமண்மதத்து மூண்டரசர் பின்சைவந்
துன்னியது மென்வியப்போ சோமேசா—வுன்னுங்காற்
பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை. (௧அ)

## இறைமாட்சி

பெற்றவைக்கென் போலிரண்டு பேரிலொரு வன்பிழைத்தாத்
சிற்றவைக்கா மென்றான் சிவசிவா—வுற்ற
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். (௧௯)

பார்சீதை சீலம் பழித்துரைத்துங் காகுத்தன்
சோர்வுறமுன் சீறிலனே சோமேசா—தேரிற்
செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. (௧௯)

### கல்வி

பார்க்கவன்பாற் கல்வி பயின்றகயன் பார்க்கவனாய்
தீர்க்க வரம்பெற்றான் சிவசிவா—வேற்கண்ணன்றாக்
கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. (௪0)

சம்பந்தர் நாவரசர் பாற்கண்டோஞ் சார்ந்துவப்ப
ஆம்பிரிவி னுள்ளுவதுஞ் சோமேசா—நம்பி
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். (௪0)

### கல்லாமை

புத்தர்மிக வாது புகன்றதுபோய் வாதவூர்ச்
சித்தர்முனே தானார் சிவசிவா—வொத்தநெறி
கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். (௪௧)

மெய்த்ததிரு வள்ளுவனார் வென்றுயர்ந்தார் கல்விநலந்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலா பாடு. (௪௧)

### கேள்வி

வெய்யமரப் பேருரைத்த வேடனும்வான் மீகியெனுந்
தெய்வ முனியானான் சிவசிவா—துய்ய
செவியுணர்விற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து. (௪௨)

ஊனுக்கூ னென்னு முரைகண் டுவந்தனரே
தூநற்சீர்க் கண்ணப்பர் சோமேசா—வானதனாற்
கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. (௪௨)

## அறிவுடைமை

சனக னுலகநெறி தாவாத ஞான
தினகர னுளன் சிவசிவா—மனதினுடன்
எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. (௪௩)

அன்றமணர் தீவைப்ப வஞ்சியதென் னென்னின்
றன்றியசீர்ச் சம்பந்தர் சோமேசா—நன்றேயாம்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில், (௪௩)

## குற்றங் கடிதல்

தன்மகனைக் கன்றினுக்குந் தான்மந் திரிக்குமென்றான்
சென்மமன்றே சென்மஞ் சிவசிவா—வுன்னுங்கால்
தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு. (௪௪)

ஈரைந் தலையா னணுகியபின் னேகலுற்றச்
சூரந் தொலைந்தானே சோமேசா—வேரின்
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (௪௪)

## பெரியாரைத் துணைக்கோடல்

வன்றொண்டர் சேரனையும் வாவென் றானழைப்பச்
சென்று தெரிவித்தார் சிவசிவா—வென்றுமென்றுந்
தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. (௪௫)

எத்திறமு மேயர்கோ னட்பாமா றெண்ணினரே
சுத்தநெறி யாரூரர் சோமேசா—வைத்த
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். (௪௫)

## சிற்றினஞ் சேராமை

அறியவச மோகலைக்கோட் டந்தணனு மாதர்
செறிய வசத்தன் சிவசிவா—பிறிதென்
மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும். (சசு)

அற்காவ மண்மொழிகேட் டல்லலுற்றான் மாறனில்லாள்
சொற்கேட்டு நோய்தீர்ந்தான் சோமேசா—தற்காக்கும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். (சசு)

## தெரிந்து செயல்வகை

பன்மறையோர்க் கானளித்த பாரரசன் கோம்பியெனுஞ்
சென்ம மெடுத்தான் சிவசிவா—வுன்னின்மிகு
நன்றாற்ற லுன்றுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. (சஎ)

சானகியை யிச்சித்துத் தன்னுயிரும் போக்கினனே
தூநி ரிலங்கையர்கோன் சோமேசா—ஆனதனால்
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். (சஎ)

## வலியறிதல்

நீச வுருவ நிலனு டிரிசங்கு
தேசிகனாற் பெற்றான் சிவசிவா—பேசின்
வினைவலியுந் தன்வலியு யாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். (சஅ)

சக்கரத்தை யேற்பன் சலந்தரனு னென்றெடுத்துத்
துக்கமுற்று வீடினனே. சோமேசா—வொக்கும்
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர். (சஅ)

## காலமறிதல்

யோகிருந்த கால முணரா துறுமதனன்
றேக மிழந்தான் சிவசிவா—வாகி
லருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின். (சகூ

வீமனவை முன்மனையை வேட்டானைக் கண்டுமொரு
தூமொழியே னும்புகலான் சோமேசா—வாமென்றே
ஊக்க முடையா ரொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. (சகூ

## இடனறிதல்

வயத்திரத மேறி வருமபிமன் றன்னைச்
செயத்திரதன் கொன்றான் சிவசிவா—முயற்சியுடன்
எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். (ரு௦)

காட்டு முயலுங் கதக்கரியைக் கொல்லுமாற்
றோட்டலர்நீர்க் கச்சியினுட் சோமேசா—நாட்டியிடின்
ஆற்றுரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். (ருப)

## தெரிந்துதெளிதல்

அத்தன் பதத்தியற்று மாழி சலந்தரனைச்
சித்ரவதை செய்த சிவசிவா—தத்தம்
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். (ருக)

தேவருமா னந்தனைமுன் றேறிப் பழிபூண்டான்
சூரியபன் மாவெண்பான் சோமேசா—தாரணிமேல்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விம்மைபை தரும். (ருக)

## தெரிந்து வினையாடல்

சுதமுகனை ராகவனுஞ் சானகியைக் கொண்டே
சிதைய வதைத்தான் சிவசிவா—விதயத்
திதனை யிதனு லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல். (௩௨)

நேசிகனைக் கொண்டசுர ரிறைக்குத்தீங் கிழைத்தான்
நூசார் துவட்டாச்சேய் சோமேசா—பேசில்
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர். (௩௨)

## சுற்றந்தழால்

அன்று தமருள்ள மறிந்தடைந்த வீடணற்குச்
சென்றுறுதி சொன்னான் சிவசிவா—வொன்று
முழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல். (௩௩)

ஆர்வீ டணனோ டளவளா வாதரக்கன்
சோர்விலா வாழ்விழந்தான் சோமேசா—நேரே
அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. (௩௩)

## பொச்சாவாமை

இப்புவிமேற் கோயி லிறந்ததய னூர்மறந்து
செப்புதலா லன்றோ சிவசிவா—எப்பொழுதும்
பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. (௩௪)

முப்புரத்தோர் வேவ வுடனிருந்த மூவரே
துப்பினுற் கண்டறிந்தார் சோமேசா—வெப்பால்
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. (௩௪)

## செங்கோன்மை

மங்காத மங்குறனை மாறன் விலங்கிட்டான்
செங்கோன் மகிமை சிவசிவா—வெங்கேனும்
வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோல தூஉங் கோடா தெனின். (௫௫)

மைந்தனை ஞமலச மஞ்சன் றனைவெறுத்தான்
சுந்தரச்செங் கோற்சகரன் சோமேசா—முந்துங
குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். (௫௫

## கொடுங்கோன்மை

தாதை சிறையிருக்கத் தங்கையழக் கஞ்சனுறுங்
தீதையெவர் சொல்வார் சிவசிவா—மேதினியில்
அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. (௫௬

பூவரில் வாளழுத வன்றேகண் டேக்குற்றார்
துய்யகங்கை சேய்முதலோர் சோமேசா—மெய்யேயாம்
அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. (௫௬

## வெருவந்தசெய்யாமை

வண்ண மகனோவ வருகீச கன்மடிந்தான்
றிண்ண மிதுவன்றோ சிவசிவா—எண்ணின்
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும். (௫எ

வெய்துரையா லக்கணமே வீந்தான் சிசுபாலன
றொய்யின் மூலையுமைபாற் சோமேசா—வுய்யாக்
கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும். (௫எ

## கண்ணோட்டம்

முப்புரத்தை நீறாக்கி மூவரையுங் காத்தநலஞ்
செப்ப முடியாதே சிவசிவா—வொப்பிற்
கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. (௫௭)

மாலான் முதலிகழ்ந்த வானவர்தீங் கும்பொறுத்துத்
தோலா விடமுண்டாய் சோமேசா—சால
ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. (௫௮)

## ஒற்றாடல்

வந்த சுகசாரர் வடிவை நிருதனன்றிச்
சிந்தைசெய் தார்காண்பார் சிவசிவா—பந்தந்
துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. (௫௯)

வேதனில்லாள் வீந்ததிற மீனவற்கு நீதெரித்தாய்
சோதிபழி யஞ்சுஞ் சோமேசா—பூதலத்தின்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். (௫[illegible])

## ஊக்கமுடைமை

நல்லதின மென்றே நரகனிறு நாளுலகிற்
செல்ல வரம்பெற்றான் சிவசிவா—வல்லமைசேர்
உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. (௬0)

வெங்கரியைப் பாகரைமுன் வீட்டினா ரேகராய்த்
துங்க வெறிபத்தர் சோமேசா—லககம்
பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின் (௬0)

## மடியின்மை

நந்தை யுளனோக்கித் தவமே வியதுருவன்
சிந்தை வலிதன்றோ சிவசிவா—நந்து
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. (௬௧

பொன்மலையின் வேங்கை பொறித்தமீண் டான்சென்னி
தொன்மைவலி யாண்மையினாற் சோமேசா—பன்னின்
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. (௬௧

## ஆள்வினையுடைமை

எய்தா திராமற் கிலக்குவன்போ லென்றுரைக்கச்
செய்தா னடிமை சிவசிவா—நொய்தேனும்
இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். (௬௨

கூற்றுவர் மூவேந்தர் நிலமுங்கைக் கொண்டாரே
தோற்றுந்தா ளாண்மையினாற் சோமேசா—சாற்று
முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும். (௬௨

## இடுக்கணழியாமை

இரணியன் றான்செய்த விடும்பை தனைமைந்தன்
றிரணமாக் கண்டான் சிவசிவா—முரணி
அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். (௬௩

என்றுமொரு மீனேவந் தின்மைமிக வுந்தளரார்
துன்றே ரதிபத்தர் சோமேசா—மன்ற
அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். (௬௩

## அமைச்சு

போயவர சாளி புகவெழக்கண் டாளியுடல்
நீயி னமைச்சிட்டான் சிவசிவா— வாயிற்
றெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. (௬௪)

கால்சேய் கதிர்சேயைக் காத்தரச னட்புதவித்
தூலமுடி சூட்டுவித்தான் சோமேசா— சாலப்
பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. (௬௪)

## சொல்வன்மை

என்றும் பதினா றெனவாரூ ரோதியசொல்
சென்றதே யின்றுஞ் சிவசிவா—நன்றிபெறச்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. (௬௫)

நித்தியத் துவங்கேட்பா னித்திரையென் றேமயக்கந்
துயத்தனனாங் கும்பகன்னன் சோமேசா—எத்திறத்தும்
ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. (௬௫)

## வினைத்தூய்மை

மைந்தன் முடிவீழ்த்தான் மாள்கவெனக் கைவிரித்த
சிந்துபதி பட்டான் சிவசிவா—தந்தஞ்
சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. (௬௬)

தக்கனானை வெள்ளிமகஞ் சாடும்போ தெண்ணியெண்ணித்
துக்கமுற்றா னைதன்னை சோமேசா—எக்காலும்
எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று. (௬௬)

### வினைத்திட்பம்

எய்து முருவறிந்து மேந்திழையாள் பாவனைதான்
செய்தபடி யாச்சே சிவசிவா—வையத்தின்
எணணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திணணிய ராகப் பெறின். (சுஎ)

செவ்வேளைப் பாலனென வெள்ளித் திறலழிந்தான்
றவ்வாத வெஞ்சூரன் சோமேசா—வவ்வா
றுருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. (சுஎ)

### வினைசெயல்வகை

மங்கைமுலைக் கச்சவிழ்த்த மாயச் சயந்தனொரு
செங்க ணிழந்தான் சிவசிவா—வெங்கு
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். (சுஅ)

வெள்ளிவெற்பை யெண்ணா தெடுப்பனென வீறெய்தித்
துள்ளியழிந் தானரககன் சோமேசா—மெள்ள
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். (சுஅ)

### தூது

சானகியைக் கண்டரக்கன் றுணிகலி வாலிலிடுக்
தீநகரி லிட்டான் சிவசிவா—ஆனுக்
கிறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. (சுகூ)

தன்றுயர நோக்கான் றனைவிடுத்தோர்க் கேயுறுதி
துன்றமொழிந் தானிடசன் சோமேசா—என்றும்
இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. (சுகூ)

### மன்னரைச்சேர்ந்தொழுகல்

அன்றரசோ டேரண்ட னூடுமுறை யாலவமே
சென்றுயிரை யிநதான் சிவசிவா—நன்றிபெற
வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். (எ0)

மாமனு னென்னு மதத்தா னுனையிகழ்ந்து
தோமுற்றார் தக்கனார் சோமேசா—வாமே
பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். (எ0)

### குறிப்பறிதல்

வென்றியி ராமனெடு வில்லைமுனி வன்குறிப்பாற்
சென்று வளைத்தான் சிவசிவா—மன்றிற்
குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். (எக)

அப்பூதி யார்மறைத்தும் வாகீச ரக்கரவைத்
துப்பா னறிந்தனரே சோமேசா—இப்புவியில்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். (எக)

### அவையறிதல்

மன்றிற் பரசமய கோளரிமுன் வல்லமணர்
சென்றறிலை யென்னுஞ் சிவசிவா—துன்றுதுற
வாற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்னி ரிழுக்கு. (எஉ)

ஓர்சங்கத் தார்கல்வி யூமைச்சேய்க் குக்காட்டிச்
சோர்வுநலந் தேர்ந்தனரே சோமேசா—வோருங்காற்
கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. (எஉ)

### அவையஞ்சாமை

முத்தமிழ்ச்சங் கத்தவரை மூதுரையால் வென்றவருஞ்
சிந்தமகிழ் வித்தார் சிவசிவா—எத்தனையுங்
கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். (எக)

வாழ்வாத வூரர் வளவனவை முன்னெதிர்த்துச்
சூழ்தே ரரைவென்றார் சோமேசா—தாழ்வகல
ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. (எஉ)

### நாடு

பொன்னியென வேழுமுனி பொற்கரக நீர்கவிழ்த்த
சென்னிவள நாடே சிவசிவா—நன்றா
மிருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. (எங)

மேல்வளமெல் லாமமைந்தும் வீர மகேந்திரந்தான்
தோல்வியுற்று மாய்ந்ததே சோமேசா—ஞாலமிசை
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. (எச)

### அரண்

நாத்தா னசலக் கருணா கரன்கலிங்கஞ்
சேர்த்தான் றிறத்தாற் சிவசிவா—பார்த்தா
லெனைமாட்சித் தாயினு மென்றேழ் வினைமாட்சி
யில்லார்க ணில்லா தரண். (எரு)

வல்லதிகன் றன்னரணம் வான்வளவன் சேனைசெலத்
தொல்லைவலி மாண்டதே சோமேசா—நல்ல
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்லா தரண். (எசு)

## பொருள் செயல்வகை

கொண்டான் வடகிரியிற் கூட லரசுபொருட்
செண்டா லடித்தே சிவசிவா—கண்டாயி
லொண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. (எசு)

உக்கிரனார் மேருவைவென் றொண்ணிதியம் பெற்றமையாற்
றொக்ககுடி காதகனர்காண் சோமேசா—மிக்குயர்ந்த
குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. (எசு)

## படைமாட்சி

பார்த்திவனைக் கட்டவிழ்த்துப் பத்ராய வன்பகையைத்
தீர்தொருவ னின்றான் சிவசிவா—பார்த்தங்
கொலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும. (எஎ)

நீநகைப்ப முப்புரமு நீறாகி மாய்ந்ததே
தூநகையாள் பாலமருஞ் சோமேசா—வானின்
ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். (எஎ)

## படைச்செருக்கு

உரமிறந்து போகாத வுள்ளத் தரவான்
சிரமறுந் துற்றான் சிவசிவா—தரமா
விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. (எஅ)

மன்மதனி னோடெதிர்த்து வீறழிந்து மாண்டாலுந்
தன்னுபுக ழேபெற்றான் சோமேசா—புன்னெருங்குங்
கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. (எஅ)

## நட்பு

உற்ற குசேலனல முற்றிருக்தற் காவுவந்தோர்
சிற்றணவுட் கொண்டான் சிவசிவா—சுறறும்
உடுக்கை யிழநதவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. (௭௯)

வாக்கரசர் பிள்ளா யெனவலித்து மாற்றலுற்றார்
தூகரும்பிள்ளை யார்செலவைச் சோமேசா—நோககி
நகுதற பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. (௭௯)

## நட்பாராய்தல்

துருவதன் கட்டுண்டான் றுரோண னடியாராற்
செருவி னின்முனஞ் சிவசிவா—வருவதன்முன்
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். (அ0)

போற்றுஞ் சுசீலன் புயபெலனை நீத்தகன்றான்
றோற்றிறைவி தும்மிடவுஞ் சோமேசா—வேற்றதே
ஊதிய மென்ப தொருவறகுப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். (அ0)

## பழைமை

தறித்தாசு கன்னனுடன் கோதை விளையாடத்
தெரிதத மணியுஞ் சிவசிவா—பொறககின்
அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். (அக)

இல்லாளைப் பற்றிமூழ் கென்றிடவு மன்புகுன்றார்
தொல்லைநெறி நீலகண்டர் சோமேசா—வொல்லா
தழிவநத செய்யினு மன்பறா ரன்பின்
வழிவநத கேண்மை யவா. (அக)

### தீநட்பு

பொன்மானென் றாசைகொண்ட பொன்னனையாள் பட்டதுயர்
சென்மாந்தர் பாவஞ் சிவசிவா—சொன்னோங்
கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. (௮௨)

ஆங்கா ரியந்தடுத்த வங்கனைசொற் கேட்டிறந்தான்
றூங்காத் தசரதன்றான் சோமேசா—ஈங்கிதனால்
ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். (௮௨)

### கூடாநட்பு

தாய்போல் வருமலகை தனனட் பறிந்துமவள்
சேய்போ லிருந்தான் சிவசிவா—மாயனெதிர்
நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும். (௮௩)

தாய்தீண்டத் தூசுடுத்துச் சாரெனுஞ்சொற் றீதென்றா
யே சுயோதனற்குச் சோமேசா—வாயதனால்
நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும். (௮௩)

### பேதைமை

தன்றலைமேற் றன்கைவைத்தோர் தானவன்முன் பெற்றவாஞ்
சென்றிறக்க லாச்சே சிவசிவா—என்றென்றும்
பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். (௮௪)

வன்சமணர் தம்பிரிவால் வாகீசர்க் கின்பமன்றித்
துன்பமென்ப தில்லையே சோமேசா—நன்காம்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். (௮௪)

### புல்லறிவாண்மை

*மாற்கு மதுவுங் கைடவனும் வாழ்நாளைத்*
*தீர்க்க வரமீந்தான் சிவசிவா—பார்க்கின்*
*அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது*
*மில்லை பெறுவான் றவம்.* (அ௫)

*இல்லாண் மறப்பவுஞ்சென் றேகிச் சலந்தரன்றான்*
*றொல்வலிபோய் மாண்டனனே சோமேசா—வல்லமையால்*
*ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்*
*போஒ மளவுமோர் நோய்.* (அ௫)

### இகல்

*தாயடிமை வானமுதந் தங்ககற்றச் சார்வயினை*
*தேயனைமால் வென்றான் சிவசிவா—வேய*
*இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே*
*மிகலூக்குந் தன்மை யவர்.* (அ௬)

*எத்திறத்துங் கெட்டா னிகலாற் சுயோதனன்சீர்*
*துய்த்தனனட் பாற்றருமன் சோமேசா—மொய்த்த*
*இகலானா மின்னாத வெல்லா நகலானா*
*நன்னய மென்னுஞ் செருக்கு.* (அ௬)

### பகைமாட்சி

*ஐங்கரனென் றோரா வாக்கன் றலைமோதிச்*
*செ ரங்க ளைந்தான் சிவசிவா—துங்க*
*வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்*
*பண்பிலன் பற்றார்க் கினிது.* (அ௭)

*ஏனையர்பால் வெற்றிகொண்டா னின்றோ டெதிர்த்திறந்தான்*
*தூநறும்பூ வாளியான் சோமேசா—மான*
*வலியார்க்கு மாறேற்ற வோம்புக வோம்பா*
*மெலியார்மேன் மேக பகை.* (அ௭)

## பகைத்திறந்தெரிதல்

ஐங்கரனைக் கண்டுநகைத் தாவணிநா லாந்திதியிற்
றிங்கள்பகை யானான் சிவசிவா—எங்கும்
பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. (அஅ)

நந்தி கலம்பகத்தான் மாண்டகதை நாடறியுஞ்
சுந்தரஞ்சேர் தென்குளத்தூர்ச் சோமேசா—சந்ததமும்
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. (அஅ)

## உட்பகை

வென்றிபுனை சம்பரனை வென்றதவ னில்லிருந்து
தென்றலெனுந் தோரான் சிவசிவா—என்றும்
அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. (அகூ)

மாற்றார் மூழியும் வளமையுங்கொண் டேகநலந்
தோற்றான் வழுதிமகன் சோமேசா—ஆற்றலிலா
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு. (அகூ)

## பெரியாரைப் பிழையாமை

வந்த முனிவோரை வணங்கா வரமுனியைச்
சிந்தைசெயல் வேண்டுஞ் சிவசிவா—முந்தும்
பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரற்
பேரா விடும்பை தரும். (கூ0)

கேண்படைக ணீறாகக் கோசிகனார் சாபத்தாற்
றுன்பமுற்றார் நாலவேந்தர் சோமேசா—இன்புறவும்
ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுறிந்து
வேந்தனும் வேந்து கெடும். (கூ0)

## பெண்வழிச்சேறல்

ஓது கனிபொருந்து மூங்கண் மனைதனுறற
சேதி சொலினென்றான் சிவசிவா—ஆதலினால்
இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும். (கக)

கற்பின்மை யில்லாள்பாற் கண்டுமைய லுற்றழிந்தான்
சொற்புண்ட ரீகாக்கன் சோமேசா—பொற்பெண்ணி
இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத தரும். (கக)

## வரைவின்மகளிர்

போச னுரைக்கிசைந்த புண்ணியனை வேசைகொன்றா
டேச மறியாதோ சிவசிவா—பேசுமிடத்து
அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும். (கஉ)

வேண்டு முருப்பசியைப் பார்த்தன் வெறுத்தனனே
தூண்டு மறைப்பரியாய் சோமேசா—யாண்டும்
பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். (—)

## கள்ளுண்ணாமை

சுக்கிரனார் சாபத் தொடர்பறிந்தோர் கள்ளிருந்த
திக்கினடப் பாரோ சிவசிவா—மக்களென்பார்
கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. (கங)

துக்கன்பான் ஞானத் ததீசியுப தேசமெல்லாந்
தொக்கதனு லானதென்னே சோமேசா—மிக்குக்
களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று, (கங)

### சூது

வெற்றிநளன் சூதாடி வீடுவிட்டுக் காடுறைந்தான்
சிற்றிடையுந் தானுஞ் சிவசிவா—சுற்றும்
உடைசெல்வ மூண்மனைவி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். (௯௪)

முற்பணயத் தாற்பின்னு மூண்டிழந்தார் சூதரொடு
சொற்படுஞ்சூ தாடினோர் சோமேசா—அற்பமாம
ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்குஞ் முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு. (௯௫)

### மருந்து

மாதவரூண் மாமருந்தின் மங்கையர்க்கு முற்பிறப்பின்
சேதி தெரிவிக்குஞ் சிவசிவா—ஆதலினூன்
மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. (௯௬)

நல்ல திலகவதி யார்மொழியை நம்பிவெந்நோய்
சொல்லரசர் தீர்த்துய்ந்தார் சோமேசா—புல்லிய
நோய்நாடி நோய்முத னாடியது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (௯௭)

### குடிமை

தந்தை வதுவை தவிராது வீடுமன்போய்ச்
சிந்தை தெளிவித்தான் சிவசிவா—நந்தா
நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. (௯௮)

மங்கலியம் விற்றும் வழாதுபணி செய்துவந்தார்
துங்கமறை தேர்கலயர் சோமேசா—வங்கண்
வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. (௯௯)

### மானம்

அன்றொருவை வேந்த னரிவைதனக் காவமர்க்குச்
சென்றுயிரை யீந்தான் சிவசிவா—துன்று
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம வரின். (கஎ)

அச்சுவத்த மாப்பட்டா னென்ன வமர்துறந்தான்
றுச்சி றுரோணனென்பான் சோமேசா—நச்சு
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின் (கஎ)

### பெருமை

நல்லூழி நான்குமனு நாரியுட னண்ணவரி
செல்வமக வானான் சிவசிவா—ஒல்லும்
பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். (கஅ)

தண்டி யடிகளிரு தாளிணைபே றுதழிந்தார்
தொண்டராம் பேய்ச்சமணர் சோமேசா—மிண்டுஞ்
சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. (கஅ)

### சான்றாண்மை

தாருவன முனிவர்தம் பிழைநோக்கா தருனே
சோரநடஞ் செய்தான் சிவசிவா—ஒருமவர்
இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. (கக)

வன்மைச் சுயோதனற்கும் வானோர் சிறைமீட்டான்
றொன்மை நெறித்தருமன் சோமேசா—பன்முறையும்
இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. (கக)

## பண்புடைமை

பாந்தட் பகைமுயலைப் பற்றுதலா லென்றுமதி
தேர்ந்து மதைநீக்கான் சிவசிவா—கூர்ந்த
அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (௧00)

உன்பணிக்கென் றோதிநல்காச் செல்வ முத்தியுறத்
துன்பமுற்றார் நால்வணிகர் சோமேசா—வன்புமிகும்
பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. (௧00)

## நன்றியில் செல்வம்

நல்விசயன் கண்ணன்வர நன்மைபுரி யாமறையோன்
செல்வமிருந் தென்னாஞ் சிவசிவா—தொல்லுலகில்
நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று. (௧0௧)

எல்லா மறையவர்க்கீந் தேவறியன் போலானான்
சொல்லாருங் கீர்த்திரகுச் சோமேசா—நல்லதே
சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறீங்கூர்ந் தனைய துடைத்து. (௧0௧)

## நாணுடைமை

சாரும் பதியிலராய்த் தாருவன மாதர்தமைச்
சேர விறைசென்றான் சிவசிவா—பாரின்மிசை
நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. (௧0௨)

புண்ணோ டுயிர்வாழ நாணியுயிர் போக்கினான்
றுண்ணெனவே வாலிமுன்னஞ் சோமேசா—எண்ணியிடில்
நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
ணண்டுறவார் நாணாள் பவர். (௧0௨)

## குடிசெயல்வகை

துய்ய பகீரதனுந் தொல்லரச ரல்லலறச்
செய்தவமென் சொல்வாஞ் சிவசிவா—வையமதில்
நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். (கOரு)

மற்திருத ராட்டிரன்சந் தானமெலா மாய்ந்ததே
சுற்றுநீர்த் தென்குளத்தூர்ச் சோமேசா—பற்றும்
இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. (கOரு)

## உழவு

வள்ளிபுனங் காத்திருந்த வாறேது வான்பயிர்செய்
தெள்ளிமையா லன்றோ சிவசிவா—உள்ளுமிடத்து
எரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு. (கOச)

வேள்வித் தொழிற்கு முழுதொழின்முன் வேண்டுமால்
சூழிசூழ் தென்குளத்தூர்ச் சோமேசா—வாழும்
உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. (கOச)

## நல்குரவு

மாமணியாற் கோசிகன்போய் மன்விடங்கீ ரான்வறுமைத்
தீமையினன் மீண்டான் சிவசிவா—வாமு
னறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். (கOரு)

நற்றருமன் வெற்றியினை நாடி விராடனெதிர்
சொற்றமொழி சோர்ந்ததே சோமேசா—கற்றறிவால்
நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். (கOரு)

## இரவு

தருமகுண மாவலிபாற் றானமெனச் சேர்ந்தான்
றிருமகி ணன்றான் சிவசிவா—பரிவின்
இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. (க0கூ)

கஞ்சாறர் சோபனப்பெண் கூந்தல் கடிதளிக்கத்
துஞ்சு மகிழ்ச்சிகொண்டாய் சோமேசா—நெஞ்சின்
இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. (க0கூ)

## இரவச்சம்

ஒன்றாகவ வேட முடன்சரா சந்தன்முனஞ்
சென்றிரந்தார் மன்னர் சிவசிவா—என்றுங்
கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். (க0எ)

எண்ணெயிரப் பஞ்சியுட லேவருத்தித் தீபமிட்டார்
றண்ணென் கணம்புல்லர் சேமேசா—கண்ணியிடில்
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். (க0எ)

## கயமை

வூரி வழிதாரா வருண னடைக்கலமாய்ச்
சேரவழி செய்தான் சிவசிவா—வாருமிதஞ்
சொல்லப் பயன்படுவர் சான்றோர் கருமபுபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். (க0அ)

ஏற்ற துரோணனையன் றெள்ளித் துருபதன்பின்
றோற்றுவிச யற்களித்தான் சோமேசா—போற்றிடினும்
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. (க0அ)

### தகையணங்குறுத்தல்

*ஆர்ந்தசுர ரானு ரமுதணங்கைக் கண்டுமகிழ்*
*சேர்ந்தசுர ரானர் சிவசிவா—சார்ந்துதனை*
*உண்டார்க ணல்ல தடுநறுக் காமம்போற்*
*கண்டார் மகிழ்செய்த லின்று.* (௧௦௯)

*வாய்ந்ததம யந்தியுரு மாணலங்கண் டின்புற்றான்*
*றோய்ந்தபுக ழானுநளன் சோமேசா—ஆய்ந்துரைக்கின்*
*உண்டார்க ணல்ல தடுநறுக் காமம்போற்*
*கண்டார் மகிழ்செய்த லின்று.* (௧௦௯)

### குறிப்பறிதல்

*பைந்தொடியுஞ் சுந்தரரும் பார்த்தகுறிப் பாலன்றே*
*சிந்தையுமொன் றானார் சிவசிவா—தந்தமது*
*கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க*
*ளென்ன பயனு மில.* (௧௧௦)

*காங்கேயன் வேண்ட வெறுத்துரைத்தாள் காணவர்மின்*
*றூங்கா வளக்குளத் தூர்ச் சோமேசா—ஆங்கண்*
*உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ*
*லொல்லை யுணரப் படும்.* (௧௧௦)

### புணர்ச்சி மகிழ்தல்

*பார்த்தன் சுபத்திரைதன் பார்வையினான் மெய்வெதுப்புந்*
*தீத்தனைக் கொண்டான் சிவசிவா—மாத்திரைநா*
*நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்*
*தீயாண்டுப் பெற்றா ளிவள்.* (௧௧௧)

*மெய்த்தவத்தைக் காசிபனும் விட்டொழிந்து மாயைபாற்*
*சுத்தமனம் வைத்தானே சோமேசா—இத்தலத்தில்*
*தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ*
*றாமரைக் கண்ணா னுலகு.* (௧௧௧)

## நலம்புனைந்துரைத்தல்

நந்து சசிமுகத்தை நாண்மதியென் றேநகுடன்
சிந்தைமகிழ் கொண்டான் சிவசிவா—முந்தும்
அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. (கக௨)

ன்ருன் றிலோத்தமையை யிச்சிக்கி லாங்கவண்மெய்
தோன்றுமெழி லென்சொல்வேன் சோமேசா—வான்ற
ற்றிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. (க[illegible])

## காதற்சிறப்புரைத்தல்

காதற் குணம்விருத்த காசிவிப சித்துரைத்த
ஷேதித் திறமே சிவசிவா—நீதிச்சொல்
உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னெள்ளமர்க் கண்ணாள் குணம். (ககந)

காடடைந்துஞ் சீதைகலப் பாற்களித்தான் பின்னயர்ந்தான்
றான்ரயோ தநியர்கோன் சோமேசா—ஆனதனல்
வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. (ககந)

## நாணுத்துறவுரைத்தல்

சோ ரைந்தவந்துஞ் சீதை யிராமனுளங்
தோ ருந்தாள் சிவசிவா—பாரிற்
கடலன்ன காம முழந்து மடலேருப்
பெண்ணிற் பெருந்தக்க தில். (ககச)

காம மிழுந்தும் தூதைக் கடிந்துவிட்டாள்
சோம நற்பாவை சோமேசா—வாமே
கடலன்னகாம முழந்து மடலேருப்
பெண்ணின் பெருந்தக்க தில். (ககரு)

## அலரறிவுறுத்தல்

இந்துநுதன் மாயை விரகெண்ணி விலாசிசொலச்
சிந்தைமகிழ் கொண்டாள் சிவசிவா—புந்தி
களித்தொறூஉங் கள்ளுண்டல வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. (கசரு)

ஓர்நா ளகலிகையை வேட்டின்று மும்பரிறை
சோராப் பழிபூண்டான் சோமேசா—ஆரயிற்
கண்டது மன்னு மொருநா ளலாமன்னுந
திஙகளைப் பாம்புகொண் டற்று. (கசரு)

## பிரிவாற்றாமை

கோதைவரி விற்றடக்கைக் கொண்டல்பிரி வாற்றாம
சீதை வனம்போனாள் சிவசிவா—ஓதுமிடத்
தின்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. (கசசு)

வாழ்விழந்த வின்னலினும் வாசவர்கோன் மிக்குநொந்தான்
சூழ்ச்சியையுமுன் பிரிந்து சோமேசா—வீழ்வார்கட்
கின்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு (கசசு)

## படர்மெலிந்திரங்கல்

மாறனொரு நாட்பிரிவின் மங்கையர்க ணீடிரவை
சீறி யுரைசெய்தார் சிவசிவா—கூறிக்
கொடியார் கொடுமையிற் றாநகொடிய விந்நா
ணெடிய கழியு மிரா. (கசஎ)

இன்பமுற்றான் மாயைதோ டோய்ந்துபின் னொமடங்கு
தன்பமுற்றான் சூரபன்மன் சோமேசா—அன்டையார்க்
கின்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது. (கசஎ)

### கண்விதுப்பழிதல்

நாடரிய கண்ணே நளனை விழித்தகற்றித்
தேடியழ லென்னோ சிவசிவா—வோடிக்
கதுமெனத்தா னோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. (ககஅ)

தாதையன்றித் தானேதாச் சந்தனைச்சேர்ந் தின்னலுற்றாள்
சூதில் சகுந்தலைதான் சோமேசா—ஓதிற்
கதுமெனத்தா நோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. (ககஅ)

### பசப்புறுபருவரல்

மாரன்மகன் மஞ்சமுடன் வாராமுன் வாணன் மகள்
சேருநினை வாலே சிவசிவா—சார்வாற்
பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். (கக௯)

கேழ்வரைச் சேடியர்சொல் கீழ்மைக் கியற்படுஞ்சொற்
சூழ்பமின்றார் துன்பத்துஞ் சோமேசா—தாழ்வில்
பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின். (கக௯)

### தனிப்படர்மிகுதி

முல்லைமட வார்கண்ணா முன்னின் றொருமொழியாற்
செல்லறவி ரென்றார் சிவசிவா—சொல்லின்
நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. (கஉ0)

பன்முனிவர் பன்னியர்கள் பண்டுன்னைக் காமுறவுந்
தன்னியருள் செய்திலையே சோமேசா—வன்னதே
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. (கஉ0)

### நினைந்தவர் புலம்பல்

சந்தனுவுங் கங்கைதனைப் படத்திலே யெழுதிச்
சிந்தையல முந்தான் சிவசிவா—தந்தமனத்
துள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. (கஉக)

தன்னையே யுன்னுந் தமயந்தி மாதைநளன்
றுன்னுர்போ னீத்திருந்தான் சோமேசா—அன்னதே
தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணுர்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். (கஉக)

### கனவுநிலையுரைத்தல்

நித்திரையி லுற்றணைந்தான் னேய னிரதநவல்லி
சித்திரரே கைக்குச் சிவசிவா—ஒத்துரைக்கத்
துஞ்சுங்காற் றேண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்தா ரவர் விரைந்து. (கஉஉ)

அல்லமனை மாயை கனவி லணைந்ததனுற்
சொல்லரிய வின்பமுற்றுன் சோமேசா—நல்ல
நனவினுற் கண்ட துாஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. (கஉஉ)

### பொழுதுகண்டிரங்கல்

வாடிக் கணவனுரு வல்லிரவிற் பிங்கலையுந்
தேடிமன நொந்தாள் சிவசிவா—வோடிப்
பொருள்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். (கஉங)

வானவர்கோன் காமநோய் மாலைவர மிக்கதே
துாநீர்ப் புளினத்திற் சோமேசா—வானதே
காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். (கஉங)

## உறுப்புநலனழிதல்

வைதாள் விசயன் மருவா துருப்பசியென்
செய்வா ளயர்ந்தாள் சிவசிவா—மெய்யாக்
கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். (௧௨௪)

ஓதாதா ளோதுகலை யொத்திளைத்தாள் சீதையென்றான்
சூதாரா வான்மீகி சோமேசா—கோதில்
பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். (௧௨௪)

## நெஞ்சோடு கிளத்தல்

வண்ண வுருக்குமணி மாயன் மணம்புணர்த
றிண்ணமென வுற்றாள் சிவசிவா—உண்ணினைவிற்
செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். (௧௨௫)

அன்பன் றுறப்பவு நாளா யினிதேடித
துன்பந் தலைக்கொண்டாள் சோமேசா—முன்பே
இருந்துள்ளி யென்ப ரிதனெஞ்சே யரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில். (௧௨௫)

## நிறையழிதல்

அன்று வனத்தண்ண லருகே நிறையழிந்தார்
சென்றுமுனி மாதர் சிவசிவா—ஒன்ற
நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். (௧௨௬)

கோற்றொடிவிற் பாய்போன்று கூடல் வணிகமின்னார்
தோற்றுநிறை யழித்தார் சோமேசா—சாற்றுங்காற்
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. (௧௨௬)

## அவர்வயின் விதும்பல்

மன்னுமுன்கே ளென்னவுஞ்சீ மந்தனிதே ருமலுளஞ்
சின்னமுற லென்றே சிவசிவா—வுன்னி
லொருநா ளெழுநாள்போற் செல்லுஞ் சேட்சென்றார்
வருநாள் வைத்தேங்கு பவர்க்கு. (கஉஎ)

சந்திரசே னன்வரவு நோக்கியுயிர் தாங்கினளாற்
சுந்தரச்சீ மந்தினிதான் சோமேசா—முந்தும்
உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னுமு ளேன். (கஉஎ)

## குறிப்பறிவுறுத்தல்

குன்றிற் சுமதி குறிப்பாற் றருமகுத்தன்
சென்றுமயல் கொண்டான் சிவசிவா—வென்று
முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. (கஉஅ)

சங்கிலிபா லாரூ ரூழிகணந் தானுகத்
தங்கமிகு மன்புவைததார் சோமேசா—பொங்கப்
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. (கஉஅ)

## புணர்ச்சி விதும்பல்

மன்ன னசலியைநீ வஞ்சனைநீங் காமலுடற்
சின்னமுற லென்றே சிவசிவா—வென்னவவற்
காணுங்காற் காணேன் றவறாய காணுக்காற்
காணேன் றவறல் லவை. (கஉகூ)

போாசனை கந்தியினைச் சாண்டலும்பே ரோசைகொண்டான்
றாசனையாச் சநதனுத்தான் சோமேசா—நேசமுடன்
உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமதிற் குண்டு. (கஉகூ)

## நெஞ்சொடு புலத்தல்

*கன்றால் விளவெறிந்த கண்ணனுட னெம்மைவிட்டுச்*
*சென்றாயே நெஞ்சே சிவசிவா—வொன்றாவித்*
*துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய*
*நெஞ்சந் துணையல் வழி.* (கடுo)

*விக்கிரமன் மற்றொருத்தி வேட்கையுற் றுந் தேடிநொந்தாள்*
*தொக்க வுருப்பசியின் சோமேசா—ஒக்கும்*
*அவர்நெஞ் சவர்ககாதல் கண்டு மெவனெஞ்சே!*
*நீயெமக் காகா தது.* (ககo)

## புலவி

*சத்திய பாமைமலர் தந்திலனென் றாடவுடன்*
*சித்த மகிழ்வித்தான் சிவசிவா— நித்தமுணற்*
*குப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது*
*மிக்கற்றா னீள விடல்.* (ககக)

*கொண்ட பரவை கொடும்புலவி யெல்லாம்வன்*
*றொண்டர்க்குப் போமழகே சோமேசா—தண்டா*
*நலீத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை*
*பூவன்ன கண்ணா ரகத்து* (ககக)

## புலவி நுணுக்கம்

*இப்பிறப்பி லேபிரியே னென்றநளை னுடேல்*
*செப்பவரி தன்றே சிவசிவா—அப்படியே*
*இம்மைப் பிறப்பிற் பிரியலமென் றேனக்*
*கண்ணிறை நீர்கொண் டனள்.* (கக௨)

*சீவகன் மஞ்சரியைத் தாழ்த்துரைப்பச் சீறினளே*
*தூவாய்க் குணமாலை சோமேசா—வாவகையே*
*தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ*
*ரிந்நீர ராகுதி ரென்று.* (கக௨)

ஊடலுவகை

மான்மகள் பாலூடி மாமானுன் மழகளிற்றின்
றேனனையாள் காந்தன் சிவசிவா—வேனெனிலங்
கூடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். (கநடு)

காயும் புலவியில் வன்றொண்டர் கடைப்பட்டுத்
தோயுமின்பின் மேலானார் சோமேசா—ஆயுங்கால்
ஊடலிற் றோற்றவர்வென் றாரது மன்னுங்
கூடலிற் காணப் படும். (கநடு)

சிவசிவ வெண்பாவும்,

சோமேசர் முதுமொழி வெண்பாவும்

முற்றுப்பெற்றன.

---

ஆயிரத் தறுநூற் றொன்பது பத்தா
மாண்டுசெல் சகாப்தநா ளதனில்
மாயிரு ஞாலத் ததிகமாந் தில்லை
மன்றில்வாழ் சென்னமல் லையர்
பாயிரு ளகற்றும் பரிதிபோற் பாவப்
படலகற் றிடுஞ்சிவ வெண்பாத்
தீயவை போக்கிப் பரகதி சேரச்
செப்பினன் றெளிதவத் தவர்க்கே.

---

உ

கணபதி துணை

# சிவசிவ வெண்பா,
# சோமேசர் முதுமொழி வெண்பாக்களுக்கு
# செய்யுள் முதற்குறிப் பகராதி



செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# முருகேசர் முதுநெறி வெண்பா



### காப்பு

கதிநெறியார் நெஞ்சிற் கதிர்க்குமுரு கேசர்
முதுநெறிவெண் பாவை மொழியப் — பங்க யமேவெட்
டறப்பக்கத்தா மல்குதில்லை யம்பலமேல் பாற்சகர்க்க
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

### அவையடக்கம்

தேசுமலி தெய்வத் திருக்குறளாக ளோர்முரு
கேசனறு நாமங் கெழுமுதலி — றேசகனேரோர்
குற்றமது நோக்காரென கொள்கையுற வின்றிசில
சொற்றனனேனோ நூலாத் தொகுத்தது.

---

## நூல்

## க. அறத்துப்பால்



### கடவுள் வாழ்த்து

தேவனையுஞ் சூரனையுந் தேற்றுருவாற் றேர்ந்தனனீ
மூவரியற வென்ன முருகேசா — வோவில்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

### வான் சிறப்பு

அன்பரிடர் கண்டரன்பா லப்பருஞ்சம் பந்தரொடு
முன்பொருகா சேற்றார் முருகேசா—இன்புதரு
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். (௨)

### நீத்தார் பெருமை

ஈண்டுதச தோற்றமா லேயந்தான பிருகுரையான்
மூண்டாற்பூ சித்தும் முருகேசா—பூண்ட
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (௩)

### அறன்வலியுறுத்தல்

அற்றமின்றிச் சாமந்தன் கோனிதியா லண்ணல்பணி
முற்றுவித்தின் புற்றான் முருகேசா—மற்றதனால்
ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். (௪)

### இல்வாழ்க்கை

மெய்த்தமிழ்வே தத்துலகுய் வித்துயர்ந்தார் வள்ளுவனார்
முத்தவில்வாழ் வுற்று முருகேசா—உத்தமமாம்
ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. (௫)

### வாழ்க்கைத்துணைநலம்

கோதில் சுதரிசனன் சொற்றிறம்பாக் கோதையொடு
மூதனார்தீர்த் துய்ந்தான் முருகேசா—பேதமிலாப்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். (௬)

### புதல்வரைப் பெறுதல்

நற்றவரா குற்றேறா சிவன்னன் சூழ்நெறியான்
முற்றினர்சொர்க்க காதி முருகேசா—வுற்றப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. (எ)

### அன்புடைமை

கின்னரரோ டேமேதா கேதரைமீட் டார்வசவர்
முன்னரன்பாற் சென்று முருகேசா—மன்னுலகில்
அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க
கென்போ டியைந்த தொடர்பு. (அ)

### விருந்தோம்பல்

துன்னுவனத் தர்தருமன் சூழ்முனிவர்ப் பேணுதலான்
முன்னுவளம் பெற்றான முருகேசா—உன்னின்
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. (க)

### இனியவை கூறல்

அண்டமுதல் வற்பழித்தே யைந்தலையு ளொன்றிழந்தான்
முண்டகன்செம் மாந்து முருகேசா—மண்டிப்
பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. (க0)

### செய்ந்நன்றியறிதல்

மெய்த்தரும தெய்வநன்றி வீட்டிமதி மம்மருற்றான்
முத்தவற்ச காபன் முருகேசா—இத்தரையில்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (கக)

### நடுவுநிலைமை

நீதியிற்பாஞ் சாலிகடா விற்றுவிடை நேர்விகன்னன்
முதலையிற் சொற்றான் முருகேசா—காதலினால்
சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வட்கோட்ட மின்மை பெறின். (௧௨)

### அடக்கமுடைமை

ஓங்குதருக் கவ்வாத ஆருளைச செய்தபுத்தர்
மூங்கையராய்ச் சோர்ந்தார் முருகேசா—ஆங்கதனால்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (௧௩)

### ஒழுக்கமுடைமை

வேதநெறி பேணாத் துராசாரன் மிகவயர்ந்தான்
மோதலகை பற்ற முருகேசா—தீதில்
ஒழுக்கத்தி னெல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து. (௧௪)

### பிறனில்விழையாமை

பார்க்கவனூர் பன்னியத்தம பற்றியவி யாயினன்முன்
மூர்க்கனுந் தண்டன் முருகேசா—வோர்க்கும்
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். (௧௫)

### பொறையுடைமை

மன்னவனாற் றன்னையொறுப் பித்துமரு வாவசுதன்
முன்னவனைக் காத்தான் முருகேசா—உன்னும்
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். (௧௬)

### அழுக்காறாமை

ஆர்த்தபொரு ளைச்சிசுபா லன்கண்ண னொழியினான்
மூர்த்தமறப் புண்டான் முருகேசா—கூர்த்த
அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. (௧௭)

### வெஃகாமை

மாண்டுநக ரோடளறு வாய்ந்தான் பராந்தகக்கோன்
மூண்டரன்பூ வெஃகி முருகேசா—வேண்டும்
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். (௧௮)

### புறங்கூறாமை

துஞ்சுமனத் தோடுவணஞ் சூரன்முத லோர்த்தூற்றி
முஞ்சலுற்ற தந்தோ முருகேசா—விஞ்சலுறக
கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். (௧௯)

### பயனில சொல்லாமை

கற்றும் பயனிலசொல் கன்னனுரைத் தெஞ்ஞான்று
முற்றும்பழி பூண்டான் முருகேசா—உற்றுணரிற்
பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும். (௨௦)

### தீவினையச்சம்

பாவ மெனுதான்செய் பற்றலின்வேர் தோடயர்ந்தார்
மூவர் மறையோர் முருகேசா—மேவ
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். (௨௧)

## ஒப்புரவறிதல்

தொண்டருக்கேற் றந்தரும சீலர்மு தாத்தொகுத்தார்
முண்டகன்மால் போற்று முருகேசா—மிண்டுமே
இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார
கடனறி காட்சி யவர். (உஉ)

## ஈகை

பொன்னகர்க்கோ னேற்பத் ததீசி புறவெனும்பை
முன்னலின்றித் தந்தான் முருகேசா—மன்னி
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. (உ௩)

## புகழ்

எத்தனைபோ வாசவர்நா ளின்பமிந்த்ரத் துய்ம்மனுற்றே
மொய்த்தபுகழ் பூண்டான் முருகேசா—உய்த்துணரின்
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில (உ௪)

## அருளுடைமை

வாழ்கணங்க ளாக்கினன்ச தானந்தன் வன்னரகின்
மூழ்குகொடி யோனை முருகேசா—தாழ்விலா
நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. (உ௫)

## புலான்மறுத்தல்.

காமுறவூன் றுய்த்தலின்மா யீகனுமார்க் கண்டனன்
மொழியுருப் பெற்றான் முருகேசா—வீழும்
படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடலசுவை யுண்டார் மனம். (உ௬)

### தவம்

பற்றிலனந் தன்புற் பதத்தரெடா னந்தநட
முற்றவத்தாற் கண்டான் முருகேசா—அற்றமற
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். (உஎ)

### கூடாவொழுக்கம்

தங்கியா சம்புனைக்கே சானகியைத் தான்கவர்ந்தான்
முன்னிலங்கை வேந்தன் முருகேசா—துன்னும்
தவமறைந்த தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. (உஅ)

### கள்ளாமை

நாகவசுக் கள்வசிட்ட னற்சுரபி யைப்பற்று
மோகமல்கிக கெட்டார் முருகேசா—போகுங்
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். (உகூ)

### வாய்மை

மாழ்கித் தருமனொரு பொய்யுரைத்தே வன்றயருண்
சூழ்கிமிகச் சோர்ந்தான் முருகேசா—தாழ்கலின்றிப்
பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (௩௦)

### வெகுளாமை

சித்ரா மன்வெகுளி மூண்டிழந்தான் நீக்கண்ணை
மூத்தனல்ல மன்பாண் முருகேசா—நித்த
மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். (௩க)

## இன்னா செய்யாமை

தன்னை வதைத்த முத்திநா தன்றனையு மெய்ப்பொருளார்
முன்னை நனி காத்தார் முருகேசா—மன்னுலகில்
இன்னசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். (௩௨)

## கொல்லாமை

தத்தீங்கு செவ்வுயிருந் தாயருத்தயை யாற்பரதர்
முத்தரின்மைம பட்டார் முருகேசா—மெத்த
நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. (௩௩)

## நிலையாமை

தக்கன்மதர்த் தெச்சமொன்று தான்செய்யச் சென்னிபெற்றா
முக்கண்ணனை யெள்ளி முருகேசா—வுக்கமின்போல [ன்
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (௩௪)

## துறவு

மேக்குவனை யின்பும் வெறுத்துச் சிவிமகவான்
மோகநிலை சார்ந்தான் முருகேசா—ஆகுகித
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் (௩௫)

## மெய்யுணர்தல்

செம்மைப் பொருளென்னத் தோந்துக்கினைக் கும்பமுனி
மும்மலமற் றுய்ந்தான் முருகேசா—இம்மைதனிற்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. (௩௬)

## கேள்வி

அத்தனையீ மப்பலியா லர்ச்சித்து வேந்தனையின்
முத்திபெற்றான் சண்டன் முருகேசா—நத்தி
எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். (௪௨

## அறிவுடைமை

தீதையன்றி நீங்கினஞ்சு சீலன் புயபலன்பின்
மூதனார்சொற் பட்டான் முருகேசா—ஓதில்
அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர். (௪௩

## குற்றங்கடிதல்

தெய்வநீதி யாதிகவர் தீமையின்ம னோசவன்கான்
மொய்வளந்தோற் றேய்ந்தான் முருகேசா—வுய்யச்
செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக கெடும். (௪௪

## பெரியாரைத் துணைக்கோடல்

நாரதனாற் சம்வாத நற்றவற்சேர்ந் தேமருத்த
மூரியின்மேம் பட்டான் முருகேசா—பாரதனில்
உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக கொளல். (௪௫

## சிற்றினஞ் சேராமை

வாக்கரசர் தூவகரான் மாழ்கித் தமக்கையான்
மோக்கநிலை பெற்றார் முருகேசா—பார்க்குங்கால்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். (௪௬

## தெரிந்து செயல்வகை

பாண்டவர்செல் வகைவர்வான் பண்டுதுரி யோதனன்றான்
மூண்டழிந்தான் மாய்ந்தும் முருகேசா—வேண்டுகோல்
எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. (சஎ)

## வலியறிதல்

வாரிசுதை வலவுழவ ணத்தையெதிர் வானவர்கண்
மூரியிழந் தெய்ததார் முருகேசா—தேரின்
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர். (சஅ)

## காலமறிதல்

சிந்துபதி யைத்தந்தை யோடிறுத்தான் செவ்வியுற
முந்திவிச யன்றான் முருகேசா—நந்தலின்றி
எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல். (சகூ)

## இடனறிதல்

சென்னியனீ கத்தைமோ திச்சிதைத்த தோர்கோழி
முன்னுறையூர்க் கானின் முருகேசா—மன்னுலகில்
அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். (ருo)

## தெரிந்து தெளிதல்

தீதெனுமி ராக்கதனைத் தேர்மித் திரசகன்றான்
மூதாக்க னானான் முருகேசா—ஆதலினால்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும். (ருக)

## தெரிந்து வினையாடல்

காண்டலின்றிச் சச்சந்தன் கட்டியங்கா ரற்கரசை
மூண்டளித்து மாண்டான் முருகேசா—வேண்டி
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர். (௫௨

## சுற்றந்தழால்

எட்த்து மகத்திறந்துஞ் சூர னிளையோரான்
மொய்த்தவளம் பெற்றான் முருகேசா—மெய்த்த
விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும். (௫௩)

## பொச்சாவாமை

கோடியர்தன் போறறேன்றக் குன்றிமதர்க் கும்பமுனி
மூடுவெண்ணெ யுற்றான் முருகேசா—நாடிகால்
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும். (௫௪)

## செங்கோன்மை

மைந்தனுய்ந்தான் வற்சமமைச் சோடுமறு நீதிகண்டோன்
முந்தைமுறை தன்னான் முருகேசா—வுந்தும்
இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின். (௫௫)

## கொடுங்கோன்மை

வேர்த்திக்கண் செய்து விளிந்தான் கருநாடன்
ஊாதிபான் மேனான் முருகேசா—கூர்த்துணையின்
மன்னாக்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னாவா மன்னாக் கொளி. (௫௬)

### வெருவந்த செய்யாமை

காத்தகபி லற்கிடும்பை செய்து கணனழிந்தான்
ஏடத்தோன் மழுவான் முருகேசா—வேத்தும்
இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். (௫௭)

### கண்ணோட்டம்

ஒவிலூழ வன்வேண்ட வுக்கிரனை ரிங்கிரன்கொண்
டுலையவிடு வித்தார் முருகேசா—நாவலிலாக்
கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. (௫௮)

### ஒற்றாடல்

பின்னைகரம் வீடியபின் பேதுற்றான் சூரனொற்றை
முனனிளிதா னாமன் முருகேசா—அன்னதனால்
ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில. (௫௯)

### ஊக்கமுடைமை

நாள்களொடு கோளியக்கு நற்பதவி யைத்துருவன்
ஊக்கத்தாற் பெற்றான் முருகேசா—நீள்பெருக்கின்
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம
முள்ளத் தனைய துயர்வு. (௬௦)

### மடியின்மை

அம்புவிமுற் றம்புரந்தா னண்மைமாது மாற்றலரை
மொய்ம்பதனால் வென்றே முருகேசா—விம்பர்
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. (௬௧)

### ஆள்வினையுடைமை

ஆள்வினையான் மிக்கதவ மாற்றிச் சுவேதமன்னன்
மூள்வினையற் றுய்ந்தான் முருகேசா—கோள்வினையாம்
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். (௬௨)

### இடுக்கணழியாமை

செற்றச் சுயோதனன்செய் தீங்கையின்பிற் றேர்தருமன்
முற்றுமின்ப நுய்த்தான் முருகேசா—பற்றிவரும்
இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. (௬௩)

### அமைச்சு

சேக்கிழார் சென்னிக்குத் தொண்டர் சிறப்புணர்த்தி
மோக்கநெறி தந்தார் முருகேசா—ஊக்கி
அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். (௬௪)

### சொல்வன்மை

வாதவூ ரானிசெண்டால் வாங்கலின்னோர் வண்மையென
மோதயிறைக் கீந்தார் முருகேசா—தீதிலதாச்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. (௬௫)

### வினைத்தூய்மை

வேள்வியிற்சோ றுநுகர்ந்தும் வேடரிற்றாழ்ந் தேழ்மறையோர்
மூள்விதன முற்றார் முருகேசா—நீள்வின்
இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சியவர். (௬௬

### வினைத்திட்பம்

சீவகன்சீ ருதிருந்தே தெவ்வையழித் தான்முடிவின்
மூவுலகும் போற்று முருகேசா—யாவும்
கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைகொட்கி
னெற்றா விழுமந் தரும். (௬௭)

### வினைசெயல்வகை

பாரண்டனென ராயணனென் றேற்றிரணி யன்மகன்பான்
மூண்டுசின மாண்டான் முருகேசா—வேண்டின்
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். (௬௮)

### தூது

சூரனெதிர் தக்கவுரை சொற்றிறமாந் தூற்றகன்றான்
மூரிமிகும் வாகு முருகேசா—ஓரின்
விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். (௬௯)

### மன்னரைச்சேர்ந்தொழுகல்

மன்னனயி ராதுமெல்ல மல்குவித்தார் சைவநெறி
முன்னுவச வேசர் முருகேசா—இன்னதனால்
போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. (௭௦)

### குறிப்பறிதல்

இந்தனக்கே லாமரமென் றன்றருமன் வீமனென்ன
முந்தவையிற் றேர்ந்தே முருகேசா—மைந்தருள்ளும்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். (௭௧)

### அவையறிதல்

சொற்றவிடைக் காடாகவி தோற்றுநரெசன் னன்சபையின்
முற்றுசவை யுறநம முருகேசா—உற்றநறுநா
அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். (எ௨.

### அவையஞ்சாமை

தாதையைவெல் வந்திமுனி தன்னையட்ட வசிரன்றான்
மூதுணர்வால் வென்றான் முருகேசா—ஓதமிலா
ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. (எ௩

### நாடு

எச்சிறப்பேயுந் தென்னிலங்கை வீந்ததரா வணத்தான்
முச்சமுமே தத்து முருகேசா—மெய்ச்சமே
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. (எ௪;

### அரண்

நம்பரனோர் செப்புங் கைலையிலங்கை வேயசுரர்
மும்மதிலு மேறனை முருகேசா—அம்ம
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண் (எ௫)

### பொருள் செயல்வகை

மன்னுமிழி பெற்றகுல பூடணனுன் மலங்கினவே
முன்னுமற மெல்லா முருகேசா—துன்னியதோர்
குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. (எ௬)

### படைமாட்சி

பற்றுநிரை மீட்டெதிர்த்த பார்த்தனாற் புண்பட்டார்
முற்றினவர் யாரும் முருகேசா—சுற்றி
ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். (எஎ)

### படைச்செருக்கு

மாலுறுத்தி வீடுமன்பான் மாண்டசிலே தற்கயர்ந்தார்
மோலிபுனை மன்னர் முருகேசா—சாலப்
புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. (எஅ)

### நட்பு

மேவ விதுர னொடு விண்ணிழந்திம் மண்ணடைந்தார்
மூவாகல் வஞ்சி முருகேசா—தாவில்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. (எகூ)

### நட்பாராய்தல்

வஞ்சகனா னந்தனட்பாற் சூரியசன் மாவானா
மூஞ்சுவிடர் பெற்றான் முருகேசா—நெஞ்சதனில்
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். (அ0)

### பழமை

நம்பனமர்க் கேன்றங்கா னற்புரங்கான் றொன்மையுன்னி
மொய்ம்புதொலை யாமன் முருகேசா—அம்புவியில்
பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். (அக)

தீநட்பு

இன்னலே பல்குசும்பா லென்று விபீடணன்றன்
முன்னவனை நீத்தான் முருகேசா—துன்னிப்
பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. (அஉ)

கூடாநட்பு

நேசன்போற் காடுவெட்டி சேரியன்றென் னற்றழுவி
மோசமே செய்தான் முருகேசா—மாசின்
மனத்தி னமையா தவரை யெனைத்தொன் றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. (அங)

பேதைமை

வேதசன்மா பல்கலையின் மிக்குமுனி வர்ப்பழிப்பான்
மூதாக்க ஞானன் முருகேசா—காதலினால்
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். (அச)

புல்லறிவாண்மை

ஓகையினால் வேதா வுரையையுமெள் ளிச்சுதன்மன்
மூகையனாய்ச் சோர்ந்தான் முருகேசா—வாகை
அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. (அரு)

இகல்

ஆதியையும் வெல்வான் சலந்தரன்சென் றாழியெஃக
மோதமுடி வுற்றான் முருகேசா—ஓதில்
இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. (அசு)

### பகைமாட்சி

நந்தியெதிர் செம்மாந்தே நாகாரி யெஞ்சலிலா
முந்தைவலி தோற்றான் முருகேசா—உந்தும்
வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. (அஎ)

### பகைத்திறந்தெரிதல்

ஆர்த்தொரன்பர் புத்தநந்தி யைச்செகுத்தார் சம்பந்த
மூர்த்திதிரு வாக்கான் முருகேசா—சீர்த்திமிகு
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. (அஅ)

### உட்பகை

சத்திமுத னூற்றுவர்மாய்ந் தார்விசுவா மித்திரனுண்
மொய்த்தபகை யாலே முருகேசா—வைத்த
அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. (அகூ)

### பெரியாரைப் பிழையாமை

தேற்றியுதங் கற்கமிழ்தி யாதுவஞ்சித் திந்திரன்சீர்
முற்றுமிழந் தெய்த்தான் முருகேசா—உற்றுணரின்
ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். (கூ0)

### பெண்வழிச்சேறல்

தாசரதி யுஞ்சீதை தன்வழிப்பட் டோர்மானின்
மோசம்போய்ச் சோர்ந்தான் முருகேசா—பேசுங்கால்
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். (கக)

### வரைவின்மகளிர்

மாழ்கிவரை வின்மகளிர் வஞ்சனையிற் பாட்களன்றான்
மூழ்கியல்லாப் புற்றான் முருகேசா—வீழ்கும்
பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். (௬௨)

### கள்ளுண்ணாமை

தூயபல பத்திரன்றான் சூதனைமாய்த் தல்லலுற்றான்
மூயமது மாலான் முருகேசா—ஆயுங்கால்
துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (௬௩)

### சூது

வெஞ்சூதாற் றந்தை வெறுக்கக் குணநிதிதான்
முஞ்சின னாண் வவ்வி முருகேசா—துஞ்சும்
அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். (௬௪)

### மருந்து

சீலமிலாப் பேய்ச்சமணர் சிந்தைதனைந்தார் பாண்டியனோய்
மூலமறி யாது முருகேசா—ஏலவே
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (௬௫)

### குடிமை

நித்திரையோர்க் கொன்றவசு வத்தாம னீக்கமுற்றான்
முத்தமுனி வோரான் முருகேசா—மெய்த்த
குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. (௬௬)

### மானம்

தேசுருவா னின்னிலைமை தேர்ந்துமா னத்திறந்தான்
மூசுபுகழ்ச் சூரன் முருகேசா—நேசமிகுஞ்
சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். (௬எ)

### பெருமை

தும்பமுனி யானகுடன் சர்ப்பவென்றே குண்டலியாய
மொய்ம்பிழந்து வீழ்ந்தான் முருகேசா—உம்பரினும்
மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லர் கீழல் லவர். (௬அ)

### சான்றாண்மை

தோக்கிடும்பை கௌசிகனுற் சூழ்ந்துமரிச் சந்திரன்சொன்
முக்கியமாக் காத்தான் முருகேசா—அக்கணமே
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். (௬௯)

### பண்புடைமை

ஓலாச் சிவசமய மோங்கியதே நால்வரான்
மூவா முதலே முருகேசா—தாவாத
பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன். (௧௦௦)

### நன்றியில்செல்வம்

மாழ்கிநிதி கல்காநால் வாணிகர்மாண் டார்கடலுண்
மூழ்கிநிதி யோடு முருகேசா—வாழ்வுமிக
ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. (௧௦௧)

### நாணுடைமை

அந்தணற்கீந் தில்லினா ணைத்தனன்சூழ் கத்துணிந்தான்
முந்துபத்தி ராயு முருகேசா—நந்தலிலா
நாண்வேலி கொள்ளாது மன்றோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். (௧௦௨)

### குடிசெயல்வகை

சத்துருவை மாய்த்தான் பராசரன்றன் சந்ததியை
முத்திபதத் துய்த்தே முருகேசா—மெத்தில்
கருமஞ் செயுவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். (௧௦௩

### உழவு

இன்னலொற்கத் தும்முழவை யேற்றலினீ சற்கமுது
முன்னமைத்தார் மாறர் முருகேசா—உன்னில்
இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய் தூண் மாலை யவர். (௧௦௪

### நல்குரவு

ஆலவா யண்ணறெழும் பைத்தருமி நீங்கவொற்க,
மூலமாத் தேர்ந்தான் முருகேசா—ஞாலமிசை
இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். (௧௦௫

### இரவு

ஒக்கலைவீட் டிக்களத்தை யோகையினி யற்பகையார்
முக்கணனுக் கீந்தார் முருகேசா—மிக்குவரும்
இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறூஉ வரின். (௧௦௬)

### இரவச்சம்

துன்பகல்வோ மென்று துருபதன்பா லேற்றயர்ந்தான்
முன்பு துரோணன் முருகேசா—வின்பமிக
இன்மை யிம்மை யிரந்துதிர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். (க0எ)

### கயமை

அஞ்சநலன் வாமதே வற்குதவான் வாசிலைச்சேய்
முஞ்சியபின் வீந்தான் முருகேசா—எஞ்சலின்றி
சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். (க0அ)

---

## ௩. காமத்துப்பால்

### தகையணங்குறுத்தல்

ஓகையினு ருக்குமணி யொண்மை கண்டு சூர்கொலெனு
மோகமிக்கான் கண்ணன் முருகேசா—வாகின்
அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. (க0௯)

### குறிப்பறிதல்

உற்றழிணி யும்மருந்து காசிபனோர்ந் தான்மாயை
முற்றழிக்கண் ணேக்கின் முருகேசா—பற்றும்
இருநோக கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. (கக0)

### புணர்ச்சி மகிழ்தல்

பூரிளமை யேற்றுவெறுப் போகனி துய்த்துவந்தான்
மூரி யயாதி முருகேசா—ஓரின்
அறிந்தா றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. (ககக)

### நலம்புனைந்துரைத்தல்

சந்தமிகு வாலைநலத் தைத்தவவா லன்வியந்து
முந்திமணை நேர்ந்தான் முருகேசா—கந்த
முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண வேய்த்தோ ளவட்கு. (௧௧௨

### காதற் சிறப்புரைத்தல்

நேர்ச்சியய னிந்துமதிச் சேர்ந்துழிலாழ்ந் தேமடிவின்
மூர்ச்சித்து யாய்ந்தான் முருகேசா—நேர்ச்சிமிக
வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. (௧௧௩

### நாணுத்துறவுரைத்தல்

கோனொடுநா ணீத்தகலி கைக்கயர்ந்தான் கோமகளான்
மூளூறுகா மத்தான் முருகேசா—வாளூறுமக்
காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. (௧௧௪

### அலரறிவுறுத்தல்

மேயருக்கு மாங்கதனை யெஃகியொரு நாண்முகுந்தை
மூயபழி பூண்டான் முருகேசா—நேயமிகக்
கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. (௧௧௫)

### பிரிவாற்றாமை

அற்றதணி யோடுதம யந்திபுன லார்ந்துநளன்
முற்றழியுஞ் சோர்ந்தான் முருகேசா—பற்றி
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. (௧௧௬)

### படர்மெலிந்திரங்கல்

ஆகமெலிந் தாள்சீதை வான்மீகி யாதரித்து
மோகமொடு நாணான் முருகேசா—வேகமிகும்
சாமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. (ககஎ)

### கண்விதுப்பழிதல்

ஒல்லையிற்கண் ணன்வருங்கொ லென்றயர்ந்தா ருத்தவன்பால்
முல்லைமட மாதர் முருகேசா—புல்லலுறப்
பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். (ககஅ)

### பசப்புறுபருவரல்

சீவகனீங் கப்பசந்து சேடிழந்தெய்த் தாள்பதுமை
மூவலிலா தோங்கு முருகேசா—ஓவலிலாச்
சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. (ககக)

### தனிப்படர்மிகுதி

பற்றி னுருப்பசியைப் பார்த்தன்வெஃகான் சிற்சபையின்
முற்றும்ப மேவு முருகேசா—உற்ற
ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது. (கஉ0)

### நினைந்தவர்புலம்பல்

சித்தமுள வல்லமன்னிந் திப்பனோ வென்றலைந்தாள்
முத்தநகை மாலைய முருகேசா—மத்தமுறும்
யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். (கஉக)

### கனவுநிலையுரைத்தல்

காதலனை நாளுங் கனவணைந்தே சாரதைதான்
மூதுவகை யுற்றாள் முருகேசா—தீதின்
நனவெனவொன் றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். (கஉஉ)

### பொழுதுகண்டிரங்கல்

அங்கிப் பொழுதின்மணிச் சூடனினை வாலயர்ந்தாண்
மூங்குமணி வல்லி முருகேசா—சிந்தைசெயிற்
காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். (கஉங)

### உறுப்புநலனழிதல்

துன்பமுற்றார் தாருவனத் தோகையரெம் மானைவெஃகி
முன்புவளை தோற்றே முருகேசா—வன்பிற்
பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். (கஉச)

### நெஞ்சொடு கிளத்தல்

மெய்த்தவ வீடுமனை வேண்டியலைந் தேவெறுத்தாண்
மொய்த்தகுழ லம்பை முருகேசா—உய்த்துணரிற்
காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. (கஉரு)

### நிறையழிதல்

போகமுவர்த் தேதவன்வின் போதல்கண்டுங் கௌசிகிபின்
மோகமிகச் சென்றாண் முருகேசா—வாகையினாற்
செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. (கஉசு)

### அவர்வயின்விதும்பல்

காதலனெந் நாள்வருங்கொ லென்றுதத்தை கவலைமிக்காண்
மூதுணர்வாற் றேர்ந்தும் முருகேசா — தீதின்
ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. (கசஎ)

### குறிப்பறிவுறுத்தல்

தந்தைக் குணர்த்தித் தவன்குறிப்பைக் காந்திமதி
முந்தியுடன் சென்றாண் முருகேசா — வந்தில
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. (கசஅ)

### புணர்ச்சி விதும்பல்

சேற்ற மிகுபாவை வன்றொண்டர் சென்றவழி
முற்றவரைக் காணாண் முருகேசா — வுற்றவரைக்
காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. (கசகூ)

### நெஞ்சொடு புலத்தல்

[illegible]வராக் கணவனைமுன் வெஃகி நளாயனிதான்
மூவாத்துன் புற்றாண் முருகேசா — ஓவாமற்
கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். (கரு0)

### புலவி

நீளையின்பாற் செல்கெனமா னெஞ்சயர மாலூடி
மூளனர்கோட் பட்டாண் முருகேசா — கோளகலும்
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். (கருக)

### புலவி நுணுக்கம்

இன்பி னெழுமையுநீங் கேனென்னக் காந்திமதி
முன்பு புலந்தாண் முருகேசா—வன்ப தனால்
இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். (௧௩

### ஊடலுவகை

காதல்துணை மாலைபிணக் கைத்தவிர்த்துச் சீவகன்றான்
மோதமிக்கான் கூடி முருகேசா—ஆதலினால்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். (௧௪

முருகேசர் முதுநெறி வெண்பா
முற்றுப்பெற்றது.

---

உ

கணபதி துணை

# முருகேசர் முதுநெறி வெண்பாவின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி



செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---